# மாங்கை

## தீபாவளி சிறப்பிதழ்

**1992**

- ☆ திருக்கயிலாய தரிசனம் (அருள்வலம்)
- ☆ தீபாவளி - கவிதைகள், கட்டுரைகள்
- ☆ 6 சிறப்புச் சிறுகதைகள்
- ☆ அழகுக் கலை
- ☆ கை வண்ணம்
- ☆ ஸ்பெஷல் இனிப்புகள் (தயாரிப்பு முறைகள்)

அதிக பக்கங்கள்...

விலை ரூ. 8/-

TA—F-1




ஒன்று சேர்த்திடுங்கள்
மேகி ஜிக்-ஸா புதிர்



வானவீதியில் விர்ரிட்டுச் செல்லுங்கள்.
உங்கள் மேகி ஸ்கை
ப்ளேஸரில்!






கடல்-வானப்பயணத்தை
பூர்த்தி செய்வீர் மேகி எஸ்
அட்வென்ச்சரர் கேமில்!

திருடனைப் பிடியுங்கள் மேகி
ஹூ-டன்-இட் மிஸ்டிரி
விளையாட்டில்

# உல்லாசம் பெறுவீர், வியப்பூட்டும் துணிகர விளையாட்டுகளில்!

## இலவசப் பரிசுகள் - மேகி கிளப் உறுப்பினர்களுக்கு!

வஞ்சகமான எதிரிகளை சாதுரியமாக
முறியடியுங்கள். மேகி ரெய்டர்ஸ்
ஆஃப் தி ரெட் ஸ்டார்
விளையாட்டில்!



**ஹலோ! மேகி கிளப்பில் சேருங்கள்: மேகியின் துணிகர உலகிற்குள் செல்லுங்கள்.**

ஐந்து மேகி நாடுல்ஸ் காலி பேக்குகளிலிருந்து அதன் முன்-பக்கத்தில் உள்ள இந்த முத்திரையை வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள் - உங்களுக்குப் பிடித்த இலவசப் பரிசைப் பெற. ஆறு முதல் எட்டு வாரங்களுக்குள் மேகி கிளப்பில் இருந்து குதூகலமளிக்கும் பரிசு உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.




மறவாதீர்! உங்களுக்கு விருப்பமானப் பரிசைக் குறிப்பிட்டு எழுதும்போது, உங்கள் பெயர், முகவரி, பிறந்த தேதி ஆகியவற்றையும் எழுதுங்கள். ஏற்கனவே நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால், உறுப்பினர் எண்ணையும் எழுதுங்கள். இதுவரை உறுப்பினராக ஆகவில்லை என்றால் இப்போது வருகிறது வாய்ப்பு! மேலே உள்ள விவரங்களை எழுதும்போது, உறுப்பினராக விரும்புவதையும் தெரிவியுங்கள். இலவசப் பரிசுடன், இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் உங்களுக்கு அனுப்புவோம்.

இலவசம்! மேகி "வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ்" புதிர்! ஒவ்வொரு 2 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு ஒரு மேகி "வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ்" புதிர் இலவசமாகக் கிடைக்கும்.

எங்கள் முகவரி :

**MAGGI CLUB**
P.O. Box 5788 New Delhi-110 055




மேலும் ஒரு சலுகை: இதுவரை மேகி போட ஹவுசைப் பெற்றுக்கொள்ளவில்லை என்றால், இப்போதே பெற்றுக் கொள்ளுங்கள்.

HTA 7778TAM




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## குழந்தைகளின் நலன்

நவம்பர் மாதம் என்றதும் நம் எல்லோருக்கும் நினைவிற்கு வருவது குழந்தைகள் தினம். நம் நாட்டின் முதல் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு பிறந்த இம்மாதம் 14ந் தேதியை நினைவு கொண்டு இப்படிக் கொண்டாடுகிறோம். அவர் குழந்தைகளிடம் பரிவுகாட்டி அவர்களது நலனில் அக்கறை கொண்டிருந்தவர்.

ஏழு ஆசிய நாடுகளின் கூட்டமைப்பான சார்க் கொழும்பில் அண்மையில் குழந்தைகள் பற்றிய மாநாடு ஒன்றை நடத்தியது. அதில் நம் நாடும் பங்கு பெற்றது. இதில் ஸ்ரீலங்கா சமர்பித்த குழந்தைகள் நலத் திட்டம் ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

அதன்படி 10 வயதிற்குகீழ் உள்ளவற்றை குழந்தை என்றும் ஜாதி, மதத்தால் வேற்றுமை காட்டாமல் இவர்கள் எல்லா விதத்திலும் பாதுகாக்கப்பட வேண்டும் என அறிவிக்கிறது. ஒரு குழந்தை உயிர் வாழவும் கல்வி, மருத்துவ உதவி பெறவும் உரிமை பெற்றது என்றும் பசி, பட்டினி, நோய், வசிக்க இடமின்மை, வன்முறை ஆகியவற்றிலிருந்து இவர்களைக் காப்பாற்ற வயது வந்தவர்கள் முன்வர வேண்டும் என்றும் அப்பிரகடனம் கூறுகிறது.

பெங்களூரில் 1986ல் நடந்த சார்க் மாநாட்டில்தான் முதலில் குழந்தைகளைப் பற்றி உலகின் கவனம் செலுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டு 1989ல் ஐ. நா நடவடிக்கை எடுத்து 1990ல் உலக மாநாட்டை நடத்தியது. ரியோடி ஜானிரோவில் நடந்த 170 நாடுகள் கூட்டமும் குழந்தைகள் பிரச்னையை பரிசீலித்து அவர்களைப் பாதுகாக்க வேண்டும் என அறிவித்தது. இதற்குப் பின் நடந்ததுதான் கொழும்பு மாநாடு.

இந்த மாநாடுகள் எல்லாம் குழந்தைப் பருவத்தின் முக்கியத்தை வலியுறுத்தி அவர்கள் சுகவாழ்வு வாழ வழி கூறி வருகின்றன.

மதிமுகம்: 91 நவம்பர் 1992 புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00





CHITRA

# ஒன்று கூடிப் பாடுவோம் கேம்ப்கோ பாடலை!

''பாலும் க்ரீமும் நிறைந்தது. தின்னத் தின்ன ருசிப்பது.

என்றும் நாங்கள் கேட்பது. அதுவே கேம்ப்கோ க்ரீமி மில்க் சாக்கலேட்''.

இந்தியாவின் மிகப்பெரிய,
நவீன ஆலை அளிப்பது.
கேம்ப்கோ லிமிடெட், மங்களூர்.




R K SWAMY/BBDO CL 10117 TM

# மேற்கு ஆசியாவில் அமைதிக்கான புது முயற்சி

இஸ்ரேயில் நாட்டில் பதினைந்து வருடம் ஆட்சி புரிந்த லிகுட் கட்சி அண்மையில் தேர்தலில் தோற்கவே தொழில் கட்சி ஆட்சிக்கு வந்துள்ளது. இவ்வளவு காலமாக இழுபறியில் இருந்த மேற்கு ஆசியாவின் பிரச்னை இப்போது தீர அறிகுறிகள் தென்படுகின்றன.



சென்ற ஜூன் மாதம் இஸ்ரேயிலின் 125 உறுப்பினர் கொண்ட நாடாளுமன்றத்திற்குத் தேர்தல் நடந்தபோது தொழில் கட்சி 47 இடங்களைக் கைப்பற்றியது. ஆளுங்கட்சியாக அதுவரை இருந்த லிகுட் கட்சி 37 இடங்களைத்தான் பெற முடிந்தது. 12 இடங்களைக் கைப்பற்றிய பெரெட்ஜ் கட்சி தொழில் கட்சியுடன் கூட்டு சேர்ந்ததால் தொழில் கட்சி அதிகாரத்தை ஏற்கப் பெரும்பாலான உறுப்பினர்களின் எண்ணிக்கையைப் பெற்று விட்டது. 5 இடங்களைப் பெற்ற இரண்டு அராபியக் கட்சிகள் வேறு தொழில் கட்சியைத் தாம் ஆதரிப்பதாக அறிவித்தன.

இதனால் தொழில் கட்சித் தலைவரான ஐட்ஜக் ராபின் புதிய பிரதமர் ஆனார். 15 ஆண்டுகளாகப் பாலஸ்தீனப் பிரச்னைக்கு வழி காணாமலிருந்த லிகுட் கட்சித் தலைவர் ஐட்ஜக் சமீரின் ஆட்சி முடிந்தது. இந்த நிலை இஸ்ரேயில் பாலஸ்தீன அமைதிக்கு வழி காண உதவும் எனக் கருதப்படுகிறது.

ஐட்ஜெக் ராபின் எழுபது ஆண்டுகளுக்கு முன் ஜெருசலத்தில் பிறந்தார். அவரது தாய் தந்தையர் கிழக்கு ஐரோப்பாவிலிருந்து வந்து ஜெருசலத்தில் குடி புகுந்தவர்கள். இதன் காரணமாக ராபினை முதலாவது பாலஸ்தீன வாசிப் பிரதமர் எனக் கூறலாம். விவசாயத் துறையில் கல்வி பயின்ற இவர் பால்மாக் எனப்படும் புரட்சிக் கட்சியில் சேர்ந்தார். இஸ்ரேயில் சுதந்திரம் பெற்ற பின் இவர் இஸ்ரேயில் பாதுகாப்பு தளத்தில் சேர்ந்தார். இதன் தலைமை அதிகாரியாகச் சிறிது காலம் இருந்தார். 1968-ல் அமெரிக்காவில் இஸ்ரேலிய நாட்டுத் தூதுவராகப் பதவி ஏற்றார். ஐந்து ஆண்டு

களுக்குப் பின் தம் நாட்டிற்குத் திரும்பி வந்தார். 1974லிருந்து 1977 வரை இஸ்ரேயில் நாட்டில் தொழில் கட்சிப் பிரதமராகப் பதவி வகித்தார்.

இதற்குப் பின் லிகுட்-தொழில் கட்சி சேர்ந்து அமைத்த கூட்டரசில் 1984 முதல் 1990 வரை ராணுவ அமைச்சராகப் பணியாற்றினார். இவர் தற்போது பிரதமராகப் பதவி ஏற்றதும் வானொலி, தொலைக் காட்சியின் வாயிலாகப் பேசுகை யில் பாலஸ்தீனப் பிரச்னைக் குத் தீர்வு காண வேண்டும் எனக் குறிப்பிட்டு நாட்டு நலனைக் கருத்தில் கொண்டு நல்ல மாற்றங் களைச் செய்யப் போவதாக அறி வித்தார்.

இவர் இம்முயற்சியில் அராபி யத் தலைவர்களான ஜோர்டான் மன்னரையும், லெபனான் சிரியா நாட்டு அதிபர்களையும் பேச்சு வார்த்தைகள் நடத்த ஜெருசலத் திற்கு அழைத்துள்ளார். இஸ்ரே யில் ஆக்கிரமிப்புப் பகுதிகளில் வீடுகள் கட்டும் திட்டத்தை நிறுத்தி வைத்திருக் கிறார். இதன் பின் இவர் எகிப்திய அதிப ரான முபாரக்கைக் கண்டு பேச தானே சென்றார். இரு தலை வர்களும் மேற்கு ஆசி யாவில் அமைதி காண இதுவே தக்க தருணம் என்று ஒப்புக் கொண்டு உள்ளார்கள்.

இச்சமயம் பாலஸ்தீன விடு தலை இயக்கம் இஸ்ரேயில் தான் ஆக்கிரமித்த பாலஸ்தீனப் பகுதி களிலிருந்தும் காஜாப் பிரதேசத் திலிருந்தும் வெளியேற வேண்டும் எனக் கோரியுள்ளது. பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைவர் யாசர் அராபத் தாம் பிரதமர் ராபினைச் சந்திக்க விரும்புவ தாகவும் கூறியுள்ளார்.

ராபினுக்கு முன் பதவியில் இருந்த சமீர் பாலஸ்தீனக் கொள் கையில் கடுமையான போக்கைக் கடைப்பிடித்து வந்ததால் அமை திக்கான பேச்சு வார்த்தைகள் சரி வர நடக்க முடியாமல் போயின. தற்போது ஆட்சி மாற்றம் ஏற்பட்ட தால் ராபினின் போக்கு அமை திக்கு அடிகோல உதவுவதாக உள்ளது. எல்லா நாடுகளுமே இந்த நல்ல திருப்பத்தைக் கண்டு மகிழ்ந்து போயுள்ளன. இதற்காக ராபினைப் பாராட்டியும் வருகின்றன.

மேற்கு ஆசியாவில் நிலையான அமைதி நிலவ வாஷிங்டனில் பேச்சு வார்த்தைகள் நடந்து வருகின்றன. இதில் இஸ்ரேயில் பிர தமர் ராபின் அறிவிக் கப் போகும் புதிய வழிமுறைகளை உல கின் எல்லா நாடு களும் ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டு இருக்கின்றன.






# விரட்டிய விதம்

**கா**ட்டூரிலிருந்த முத்துசாமிக்கு திருச்சியில் அரசாங்க உத்தியோகம் கிடைத்தது. அதற்குப் பின் கீரையூர் என்ற கிராமத்துப் பெண்ணான லட்சுமியை அவன் மணந்து கொண்டான். திருச்சி நகரில் எவ்வளவு தேடியும் நல்ல வீடாகக் குடியிருக்க வாடகைக்குக் கிடைக்கவில்லை. முடிவில் அவன் நகருக்கு வெளியே ஒரு பழைய வீட்டை வாடகைக்கு பேசி லட்சுமியை கிராமத்திலிருந்து அழைத்து வந்தான்.

லட்சுமியும் தன் தந்தை கொடுத்த கட்டில், பீரோ, பாத்திரங்களுடன் அந்த வீட்டிற்கு வந்தாள். முதல் நாளில் தான் எல்லாவற்றையும் அறைகளில் ஒழுங்காக வைப்பதாகக் கூறி அவள் தன் கணவனை அலுவலகத்திற்கு அனுப்பினாள். பிறகு முன் அறையில் மேஜை நாற்காலிகளையும் அடுத்த அறையில் கட்டிலையும் பீரோவையும் வைத்தாள். பின்புறம் உள்ள மூன்றாவது அறையில் சமையலுக்கான அடுப்பையும் பாத்திரங்களையும் அரிசி பருப்பு உப்பு போன்றவற்றையும் வைத்தாள்.

மத்தியான சாப்பாட்டிற்கு வந்து விடுவதாக கூறிவிட்டு முத்துசாமி சென்றதால் அவள் சமையல் முடித்துவிட்டு முன் அறையில் சன்னல் பக்கத்தில் நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். அப்போது சன்னல் வழியாக ஒரு குரங்கு வீட்டிற்குள் குதித்து அவள் முன் நின்றது.

குரங்கைக் கண்டு லட்சுமி பயந்து எழுந்தாள். அப்போது அக்குரங்கு பிசாசாக மாறி அந்த நாற்காலியில் உட்கார்ந்தது. அது லட்சுமியிடம் "நான் பல வருடங்களாக வசித்து வரும் வீடு இது.

—கி. சௌம்யா—



இங்கு எல்லாம் நான் சொல்கிற படிதான் நடக்க வேண்டும். தெரிந்ததா? முதலில் நீ செய்த சாப்பாட்டை நான் சாப்பிடப் போகிறேன். பிறகு நீ உன் கணவனுக்கு வேறு சமையல் செய். சமையலறை வீட்டின் முன்அறையில்தான் இருக்க வேண்டும். இந்த நாற்காலி அந்த மேஜை எல்லாம் பின்புற அறையில். கட்டில், பீரோ எல்லாம் படுக்கை அறையிலேயே இருக்கட்டும்'' என்றது.

லட்சுமி பயந்து போய் பிசாசு கூறியபடியே சாமான்களை மாற்றி வைத்தாள். பிசாசு அவள் முத்துசாமிக்காகச் செய்து வைத்திருந்ததை முழுவதும் சாப்பிட்டது. பிறகு அவளை புதிதாகச் சமைக்கச் சொல்லி குழம்பில் காரத்தையும் காய்கறியில் உப்பையும் அது அள்ளிப் போட்டது. கடைசியில் அது "நீ என்னைப் பற்றி யாரிடமும் சொல்லக் கூடாது. சொன்னால் உன்னை லேசில் விடமாட்டேன். நான் தினமும் வந்து சாப்பிட்டுப் போவேன். அதை நினைவில் வைத்துக் கொள்'' என்றது. லட்சுமியும் பயந்து போய் அவ்வாறே செய்வதாகக் கூறினாள்.

மத்தியானம் சாப்பிட வந்த முத்துசாமி தன்மனைவி பரிமாறிய உணவை எடுத்து ஒரு வாய் சாப்பிட்டதும் "இதென்ன சமையல்! இப்படித் தான் சமைக்க உனக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்களா? உப்பு எவ்வளவு போட வேண்டும் காரம் எவ்வளவு போட வேண்டும் என்று உன் அம்மா சொல்லிக்கொடுக்கவில்லையா? அது போகட்டும். எந்த சாமானை எங்கே வைக்க வேண்டும் என்பது கூடவா தெரியாது? வீட்டின் முன்புறத்திலா சமையலறை இருக்கும்? யாராவது வந்தால் வீட்டில் பின்புறத்திற்கு அழைத்துப் போய் உட்கார வைத்தா பேசுவார்கள்? இதுகூட உனக்குத் தெரியவில்லையா? உன்னைப் போய்க் கல்யாணம் செய்து கொண்டேனே. எல்லாம் என் தலைவிதி'' என்று கூறி ஒரு டம்ளர் மோரைக் குடித்து

விட்டு போனான். லட்சுமியால் தன் நிலையை விளக்க முடிய வில்லை. அதற்குக் காரணம் பிசாசின் பயமுறுத்தலே.

முத்துசாமி பின் அறையில் அடுப்பையும் பாத்திரங்களையும் கொண்டு போய் வைத்தான். பின் அறையில் இருந்த மேஜை, நாற்காலிகளை முன் அறையில் கொண்டு வந்து போட்டான். கணவனும் மனைவியும் அன்றிரவு எதுவும் பேசாமல் படுத்துத் தூங் கினார்கள்.

மறுநாள் முத்துசாமி அலுவலகத் திற்குக் கிளம்பும் போது "இன்றா வது நன்றாகச் சமைத்து வை" என்று கூறிவிட்டுச் சென்றான். அவன் போனதும் முன்தினம் வந்த குரங்கு சன்னல் வழியாகக் குதித் தது. சமையல் சாமான்கள் மீண்டும் பின்புற அறைக்குப் போனது கண்டு அந்தக் குரங்கு பிசாசாக மாறி "நான் இங்கு வெகு கால மாக வாழும் பெண் பிசாசு. எனக்கு இப்படி இருந்தால் பிடிக் காது. இந்த மேஜை நாற்காலி களைப் பின்புற அறையில் கொண்டு போய்ப் போட்டுவிட்டு சமையலறைச் சாமான்களை இங்கே எடுத்து வா" என்றது. லட்சுமியும் மறுபேச்சு பேசாமல் அந்தப் பிசாசு சொன்னபடியே செய்தாள். அன்றும் அவள் முத்துசாமிக்குச் சமைத் ததை எல்லாம் சாப்பிட்டது. முத்து சாமிக்கு வேறு உணவு தயாரிக்கச் சொல்லி அதில் உப்பையும் காரத்





தையும் அள்ளிப் போட்டு விட்டுப் போனது.

வீடு திரும்பிய முத்துசாமி சமையல் சாமான்கள் எல்லாம் மறுபடியும் முன்புற அறைக்கு வந்து விட்டதைக் கண்டு லட்சுமியைக் கோபித்துக் கொண்டான். சாப்பிட உட்கார்ந்து சமையல் முன்தினம் போல ஒரே காரமாயும் உப்பாயும் இருப்பது கண்டு "எல்லாம் என் தலையெழுத்து. ஒரு டம்ளர் மோர் கொண்டு வா" என்றுகூறி மோரைக் குடித்து விட்டுப் போனான். லட்சுமியோ முன்தினம் போல அன்றும் எதுவும் சாப்பிடவில்லை. இது போல மேலும் மூன்று நாட்கள் கழிந்தன.

ஆறாவது நாள் லட்சுமி தன் கணவனிடம் "இங்கு எதுவும் சரி இல்லை. நான் என் பிறந்த வீட்டிற்குப் போய் இரண்டு நாட்கள் இருந்துவிட்டு வருகிறேன்" என்றாள். முத்துசாமியும் "ஆகா! இப்போதே போ. உன்னைக் கட்டிக் கொண்டு வாய்க்கு ருசியாகக் கூட எனக்கு சாப்பாடு கிடைக்கவில்லை. எல்லாம் என் தலை விதி" என்று கூறி அவளை அவளது ஊருக்கு உடனே அனுப்பி விட்டான்.

மெலிந்து சோர்வுடன் வீடு வந்த தன் மகளை லட்சுமியின் தாயார் பார்த்து "என்னம்மா இது! என்ன நடந்தது?" என்று கேட்டாள். லட்சுமியும் தன் நிலையை விவரமாகக் கூறினாள். அதைக் கேட்டுக் கொண்டிருந்த லட்சுமியின் அண்ணன் அனுமந்தப்பன் "இவ்வளவு தானா? அந்தப் பிசாசை நான் விரட்டி அந்த வீட்டுப் பக்கமே வராமல் செய்து விடுகிறேன்" என்று கூறி விட்டுத் திருச்சிக்குப் போய் முத்துசாமியைக் கண்டான். முத்துசாமி முதலில் அவனிடம் சரியாகப் பேசவில்லை. "என்ன! உன் தங்கைக்குப் பரிந்து பேச வந்திருக்கிறாயா?" என்று முத்துசாமி கடுகடுப்புடன் கேட்டதும் அனுமந்தப்பன் நடந்ததை எல்லாம் விவரித்துக் கூறியதும் அவன் "ஓ! இதுவா சங்கதி. அந்தப் பிசாசை விரட்ட ஒரு மந்திரவாதியை அழைத்

துப் பூசை போட்டு அந்தப் பிசாசை விரட்டி விடலாமா?'' என்று கேட்டான்.

அனுமந்தப்பனும் ''பூசாரி எல்லாம் வேண்டாம். நான் சொல்கிற படி செய்யுங்கள். எல்லாம் சரியாகி விடும். உங்கள் வீட்டிற்கு வருவது பெண் பிசாசு என்று தெரிகிறது. அதை நான் விரட்டுகிறேன்'' என்று கூறித் தன் திட்டத்தைக் கூறினான். முத்துசாமியும் அதற்குச் சம்மதித்தான்.

அனுமந்தப்பன் தன் ஊருக்குப் போய்த் தன் திட்டத்தை லட்சுமியிடம் கூறி அதன்படி அவள் நடந்து கொள்ளும்படிச் சொன்னான். அவளும் அதற்கு இணங்கவே மறுநாளே அவன் தன் தங்கையைத் திருச்சியில் கொண்டு போய் விட்டான்.

முத்துசாமியும் வீட்டை விட்டுக் கிளம்பினான். அவன் போனதும் பிசாசு காக்கை வடிவில் பறந்து வீட்டினுள் வந்தது. அப்போது சமையலை லட்சுமி முன்புற அறையில் செய்து கொண்டிருந்தாள். காக்கை அவளருகே போய்ப் பிசாசாகி நின்று ''இன்று சாமான்கள் எல்லாம் என் விருப்பப்படியே அந்தந்த அறைகளில் இருக்கின்றனவே. பேஷ்! பேஷ்! என் சமையலை முதலில் முடி. பிறகு உன் கணவனுக்குச் சமையல் செய்'' என்றது.



லட்சுமியும் இரண்டு சமையல்களையும் செய்து முடித்தாள். பிசாசு சாப்பிட்டு முடித்ததும் முத்துசாமியும் அனுமந்தப்பனும் வீட்டிற்குள் வந்து விட்டார்கள். உடனே பிசாசு காக்கையாக மாறி சன்னல் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டது.

முத்துசாமியையும் அனுமந்தப்பனையும் லட்சுமி கண்டதும் ''ஓ! அனுமந்து அண்ணாவா? ஊரிலிருந்து திடீரென்று வந்திருக்கிறீர்களே! ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று ஆவலுடன் கேட்டாள். அவர்கள் பேசவதை காக்கையாக மாறிய பிசாசு கேட்கலாயிற்று.

அனுமந்தப்பனும் ''ஆமாம்.

ஒரு வேலையாகத்தான் வந்தேன். உனக்குத்தான் தெரியுமே என் பெயரைக் கேட்டாலே பிசாசுகள் எல்லாம் பயந்து நடுங்கும் என்று. நான் நேற்று ஒரு ஆண் பிசாசைப் பிடித்து ஒரு ஜாடியில் புகுத்தி மூடி வைத்திருக்கிறேன். அது அழுது தன்னோடு இருக்க ஒரு பெண் பிசாசைப் பிடித்து அந்த ஜாடிக் குள் போடும்படி வேண்டிக் கொண் டது. அதற்கு ஏற்றதாகப் பெண் பிசாசை இப்போது தேடிக் கொண் டிருக்கிறேன். ஆ! நல்ல வேளை. இங்கே அப்படி ஒரு பிசாசு கிடைத்து விட்டது. ஆஞ்சனேய மந்திரத்தை உச்சரித்து அதைப் பிடித்து விடுகிறேன். அது இப்போது உன் வீட்டு சன்னலில் காக்கை உரு வில் உட்கார்ந்திருக்கிறது'' என்று கூறி பலமாக ''ஆஞ்சனேயா! ஆஞ்சனேயா!!'' என்று கத்தினான்.

அதைக் கேட்ட காக்கை வடி வில் இருந்த பிசாசு ''ஐயோ! இவன் என்னைப் பிடித்து ஜாடிக் குள் போட்டு விடுவான் போலிருக் கிறதே. இனிமேல் இங்கே இருக்க வும் கூடாது. இந்த வீட்டுப் பக்கம் தலை காட்டவும் கூடாது'' என எண்ணிப் பயந்து உடனே அங்கி ருந்து பறந்து போய் விட்டது.

அப்போது அனுமந்தப்பன் ''பார்த்தீர்களா? நான் எதிர் பார்த்தபடி அந்தப் பிசாசு நான் சொல்வதைக் கேட்டு விட்டு பயந்து ஓடிவிட்டது. இனிமேல் என் தங் கைக்குக் கவலை இல்லை. எல் லோரையும் போல நன்றாகக் குடித் தனம் செய்வாள்'' என்றான்.

அப்போதே சமையல் சாமான் கள் பின்புற அறைக்குக் கொண்டு போகப்பட்டன. முன்புற அறைக்கு மேஜை, நாற்காலிகள் வந்தன. முத்துசாமியும் லட்சுமி செய்த சமை யலைப் புகழ்ந்து தினமும் நன்றா கச் சாப்பிடலானான். அதற்குப் பிறகு அந்தப் பெண் பிசாசு அந்த வீட்டுப் பக்கம் தலை காட்ட வில்லை.






## 7

*[வசந்த மாளிகையிலிருந்து காணாமல் போன இளவரசி வித்தியாவதியைத் தேடிக் கண்டுபிடிக்க மகேந்திரன் என்ற வாலிபன் சென்றான். அவன் முதலில் சாரஸசரோவரத்திலுள்ள வசந்த மாளிகைக்குச் சென்று படகோட்டியிடம் பேசி காட்டிற்குச் செல்லும் வழியில் போனான். அதன்பிறகு—]*

**கா**ட்டுப் பாதையில் சென்ற மகேந்திரன் அது கரடுமுரடாகவும் முட்செடிகள் வளர்ந்து ஆங்காங்கே தடைப்படுத்துவதையும் கண்டான். அவன் அவற்றை விலக்கிக் கொண்டு மிக ஜாக்கிரதையாக நடந்து சென்றான். இருட்டி விட்டது. அப்போது வழியும் சரியாகத் தென்படவில்லை.

அவன் அன்றைய இரவுப் பொழுதை ஒரு மரத்தடியே தங்கிக் கழித்துவிட்டு மறுநாள் சூரியோதயம் ஆனதும் அங்கிருந்து கிளம்பினான். அப்போதும் கூட பாதை இருப்பது தெரியவில்லை. அப்போது ஓரிடத்தில் ஒரு குளத்தை அவன் கண்டான். உடனே அதனருகே சென்றான். அங்கு ஓரிடத்தில் ஒரு பாதை தென்பட்டது.

அதைக் கண்ட மகேந்திரன் உற்சாகத்துடன் அந்த வழியில்



அந்தப் பாதை அவனை சமமான நிலப் பரப்பில் கொண்டு போய் விட்டது. அங்கு ஓரிடத் தில் ஒரு சிறிய குடிசை இருப்பதை அவன் கண்டான்.

அடர்ந்த காட்டின் நடுவே எப் படி ஒரு குடிசை வந்தது என அவன் ஆச்சரியப்பட்டு அதனை அணு கினான். அப்போது ஒரு குரல் "யாரப்பா நீ?" என்று கனிவுடன் கேட்டது. மகேந்திரன் திரும்பிப் பார்க்கும் போது ஒரு யோகி ஒரு செடிக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான்.

அவன் அவரை வணங்கி "சுவாமி! நான் ஒரு முக்கியமான வேலையாகக் கிளம்பி இருக்கிறேன். தங்களது தரிசனம் கிடைத்தது என் பாக்கியம்" என்றான் பணி வுடன்.

ஒளியுடன் விளங்கும் அந்த யோகி புன்னகை புரிந்து "மகனே! நீ களைத்திருக்கிறாய். சற்று நேரத் தில் சூரிய அஸ்தமனமும் ஆகி விடும். எனவே இன்றைய இரவுப் பொழுதை இங்கே கழித்துவிட்டு நீ நாளை செல்லலாம்" எனக்கூறி வாஞ்சையுடன் அவனைத் தடவிக் கொடுத்தார். பிறகு அவனை அழைத்துக் கொண்டு அவர் தம் குடிலுக்குள் சென்றார்.

யோகியார் ஓரிடத்தில் அமர அவரருகே மகேந்திரன் பணிவுடன் அமர்ந்தான். அப்போது அவர்

சென்றான். அதுவும் செடிகொடி கள் வளர்ந்து மூடப்பட்டிருந்தா லும் ஒரு ஒற்றையடிப் பாதை என்பது நன்கு தெரிந்தது. அங்கு ஜனநடமாட்டம் இருக்கிறது என் பதை அவனால் ஊகிக்க முடிந்தது. அந்த வழியே செல்லும் போது சுற்றிலும் பார்த்துக் கொண்டே அவன் சென்றான். ஏனென்றால் காட்டில் எந்த இடத்தில் எப்படிப் பட்ட கொடிய மிருகம் இருக்கும் எனச் சொல்ல முடியாதே.

அந்த ஒற்றையடிப் பாதை போய்க் கொண்டே இருந்தது. மகேந்திரனும் அதில் போய்க் கொண்டே இருந்தான். அதுவரை உயரப் போய்க் கொண்டிருந்த



"நான் மனநிம்மதி பெற பலஆண்டுகள் எங்கெங்கோ சுற்றி அலைந்தேன். முடிவில் இங்கு வந்து தங்கி மன அமைதி பெற்றேன். இங்கேயே தங்கியும் விட்டேன். இங்கு வந்ததிலிருந்து இன்று வரை நான் எந்த மனிதனையும் பார்த்தது இல்லை. உன்னைத்தான் இங்கே முதலில் காண்கிறேன்" என்றார்.

மகேந்திரனும் "சுவாமி! என் பெயர் மகேந்திரன். வீரபுரத்தைச் சேர்ந்தவன். சிறுவயதில் என் தந்தையை இழந்து என் தாயுடன் என் சிற்றப்பாவின் வீட்டில் வளர்ந்து வந்தேன். என் சிற்றன்னை திடீரென இறந்து போனதால் வாழ்க்கை மீது வெறுப்பு கொண்டு என் சிற்றப்பா எங்களை விட்டுவிட்டு எங்கோ போய் விட்டார். அப்போது முதல் நானும் என் தாயும் சிரமப்பட்டு வாழ்ந்து வந்தோம்" என்றான்.

அதைக் கேட்ட யோகியின் கண்களில் கண்ணீர் ததும்பியது. அது கண்டு மகேந்திரன் தன் துயரக் கதையைக் கேட்டே யோகி கண் கலங்குகிறார் என நினைத்து விட்டான். அவன் மேலும் தொடர்ந்து "ஒரு வாரத்திற்கு முன் இளவரசி வித்தியாவதி திடீரெனக் காணாமல் போய் விட்டாள். அவளைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்து வருவதாக மன்னரிடம் கூறினேன். மன்னர் அதற்கு அனுமதி அளித்ததோடு என் தாயாரை நன்கு கவனித்துக் கொள்ளவும் ஏற்பாடு செய்தார். நான் இளவரசியைத் தேடும் முயற்சியில்தான் இந்த இடத்தை அடைந்தேன்" என்றான்.

யோகியும் "அப்படியா? இந்தச் சுற்று வட்டாரத்தில் எந்த மனிதனும் இல்லை. அதோ தெரியும் மலைக்கு அப்பால் ஹிமகிரி என்ற நாடு உள்ளது. இங்கிருந்து அங்கே போவது கூட மிகச் சிரமமே" என்றார். மகேந்திரனும் "அரசாங்க சோதிடர் மேற்கு திசையில் தேடுவது நற்பலனை அளிக்கும் என்று கூறினார். இந்தக் கடினமான வேலையைச் செய்வது என் கடமை என்று கருதுகிறேன். இதற்காக என் உயிரையே அர்ப்பணிக்கவும்



தயங்க மாட்டேன்'' என்றான்.

யோகியும் "நீ கடமை தவறக் கூடாது என நினைப்பது உன் உயரிய குணத்தைக் காட்டுகிறது. இதற்காக உன்னைப் பாராட்டு கிறேன். இப்போது இரவு வெகுநேர மாகி விட்டது. இனி தூங்கலாம். நாளைக் காலையானதும் நீ இங்கி ருந்து போகலாம்'' என்றார்.

காலையில் மகேந்திரன் கண் விழித்தபோது யோகியார் தியானத் தில் இருப்பதைக் கண்டான். அவர் தியானத்தை முடித்துக் கண் விழித்ததும் மகேந்திரன் அவரை விழுந்து வணங்கினான். யோகி யாரும் அவனுக்கு ஆசிகள் கூறி "உன் துணிச்சலும் சக்தியும் உனக்கு வெற்றியைக் கொடுக்கும். இந்த மோதிரத்தை அணிந்து கொள். உனக்காகவே உபாசனை செய்து அற்புத சக்தியை இதனுள் புகுத்தி யுள்ளேன். இதில் பதிக்கப்பட்ட ஒளிவிடும் கற்களின் சக்தியைப் போகப்போக நீயே தெரிந்து கொள்வாய். ஆனால் இதைப் பற்றி நீ யாரிடமும் கூறக் கூடாது. மீறிக் கூறினால் இதன் சக்தி எல்லாம் போய்விடும்'' என்று கூறினார்.

மகேந்திரன் அவரை வணங்கி அந்த மோதிரத்தைப் பெற்றுக் கொண்டான். அப்போது அந்த யோகியார் "நீ வெற்றியுடன் திரும்பி வரும்போது முதலில் என்னைப் பார்த்துவிட்டு உன் தாயாரைப் பார்க்கப் போ. அவள் எவ்வளவு ஆவலுடன் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள் என்று எனக்கு நன்றாகவே தெரி யும். ஆனாலும் நான் சொன்ன படியே செய்'' என்றார்.

மகேந்திரனும் "சுவாமி! இப் போது என் தாயாரைப் பற்றிய கவலை எனக்கு இல்லை. அவளுக்கு ராஜோபசாரம் நடக்கிறது. அவளும் திருப்தியுடன்தான் இருப்பாள். தாங்கள் கூறியபடியே நான் வெற்றி யுடன் திரும்பி வந்து தங்களைக் காண்கிறேன். எனக்குத் தங்களது ஆசிகள் உறுதுணையாக இருக் கும்'' என்று கூறி மீண்டும் வணங் கினான்.



யோகியும் அவனைக் கட்டித் தழுவி விடை கொடுத்தார். அப்போதும் அவரது கண்களில் கண்ணீர் ததும்பியது. அதைக் கண்ட மகேந்திரன் ஆச்சரியம் அடைந்தான். அவன் குடிலிலிருந்து கிளம்பி மேற்குப் பக்கமாகவே சென்றான். அவன் சென்ற பாதை அவ்வளவு சீராக இல்லாது போனாலும் நடக்க எளிதாகவே இருந்தது.

அவன் கொஞ்ச தூரம் போனதும் ஒரு குன்றின் உச்சியின் மீது நின்ருன். அங்கிருந்து நாலா பக்கத்திலும் அவன் தன் பார்வையைச் செலுத்தினான். ஓரிடத்தில் உயரமான மதில்சுவரைக் கண்டு அது ஒரு மாளிகையின் மதிலாகத் தான் இருக்க வேண்டும் என ஊகித்து விட்டான். அதைக் கூர்ந்து பார்த்தும் அதன் நுழைவாசல் எங்கே இருக்கிறது என்பதை அவனால் கண்டு பிடிக்க முடியவில்லை.

அவன் அந்த மாளிகையை நோக்கி நடந்தான். மாளிகையை அணுகும்போது ஓரிடத்தில் படிக்கட்டு இருப்பது கண்டு அதன் படிகளின் மீது ஏறிச் சென்றான். அது ஒரு இரும்புக் கதவின் முன் கொண்டு போய் விட்டது. அக்கதவு பலமான இரும்புச்சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தது. அவன் அந்த சங்கிலியைப் பிடித்து பலமாகக் குலுக்கினான்.

சற்று நேரத்தில் அக்கதவு திறக்கப்பட்டது. கையில் தீவட்டியுடன் வந்த ஒருவன் ''யார் நீ? கதவைத் தட்டியது என் எஜமானர் என்றல்லவா நினைத்தேன். இங்கே ஏன் வந்தாய்?'' என்று கேட்டான்.

மகேந்திரனும் ''என் பெயர் மகேந்திரன். வீரபுரத்தைச் சேர்ந்த வன். ஹிமகிரி நாட்டிற்கு வேலை தேடிப் போகிறேன். வழியில் இந்த மாளிகையைக் கண்டதால் இன்றிரவுப் பொழுதை இங்கு கழித்துவிட்டுப் போகலாம் என நினைத்துக் கதவைத் தட்டினேன்'' என்றான்.

அந்த ஆளும் ''நான் இந்த வாச

லின் காவலாளி. இரவில் தங்க இடம் கேட்கிறாய். என் அறையில் நீ தங்கிப் போகலாம்'' என்றான் மகேந்திரனும் அக்காவலாளிக்கு நன்றி செலுத்தி அவனுடன் அவனுடைய அறைக்குச் சென்றான். அவன் மகேந்திரனை அங்கு உட்காரச் சொல்லி சாப்பிட அவனுக்கு ஏதாவது கொண்டு வருவதாயும் எக்காரணம் கொண்டும் அந்த அறையை விட்டு வெளியே அவன் போகக்கூடாது என்றும் எச்சரித்தான்.

மகேந்திரனும் "இந்த இரவு வேளையில் எனக்குத் தங்க இடம் கொடுத்ததற்கு மிக்க நன்றி. நான் வெளியில் எங்கும் செல்ல மாட்டேன். உனக்கு ஆபத்து நேரும் விதத்தில் நடந்து கொள்ளமாட்டேன். நான் நாளைக் காலையே உன் எஜமானர் இங்கு வருவதற்கு முன் போய்விடுகிறேன்'' என்றான்.

அக்காவலாளியும் "அப்படியே செய். என் எஜமானர் மிகவும் கண்டிப்பானவர். ஆனால் நல்ல மனம் படைத்தவர். அவரைப்பற்றி பயம் கொள்ளாதே'' என்று கூறி விட்டுச் சென்றான். அவன் போன பின் மகேந்திரன் அந்த மாளிகை பற்றி யோசிக்கலானான்.

ஜன நடமாட்டம் இல்லாத இக் காட்டில் ஒரு பெரிய மாளிகையை ஏன் கட்ட வேண்டும்? இதன் சொந்தக்காரர் யார்? அவர் நல்ல



மனம் படைத்தவர் என்று இதன் காவலாளி கூறுகிறானே. ஒருவேளை நான் சந்தேகிப்பது போல அரச குமாரி இந்த மாளிகையில் சிறை வைக்கப்படவில்லையோ? இதன் எஜமானர் நல்லவர் என்றால் இத்தகைய கொடிய செயலைச் செய்யத் துணியமாட்டாரே.

இப்படி எல்லாம் மகேந்திரன் யோசித்துக் கொண்டிருக்கையில் காவலாளி ஒரு தட்டில் உணவை எடுத்து வந்து மகேந்திரனின் முன் வைத்தான். அவனிடம் "ஏதோ கிடைத்த உணவைக் கொண்டு வந்திருக்கிறேன். இதனை உண்டு உன் பசியைப் போக்கிக்கொள்'' என்றான்.

மகேந்திரனும் "மிக்க நன்றி. உன் எஜமானர் இப்போது வந்து விடுவாரோ?" என்று கேட்டான். அதற்கு அக்காவலாளியும் "அவர் எப்போது வருவார், எப்போது போவார் என்பது பற்றி எல்லாம் எங்களுக்குத் தெரியாது. அவர் எந்த நிமிடத்திலும் வரலாம். அத னால் நாங்கள் மிகவும் ஜாக்கிரதை யுடன் இருப்போம்" என்றான்.

அப்போது மகேந்திரன் "நாங் கள் என்று நீ சொல்கிறாயே. அப் படியானால் இந்த மாளிகையில் உன்னைத் தவிர வேறு சிலரும் இருக்கிறார்கள் என்று தெரிகிறது. அவர்கள் போக உன் எஜமான ரின் குடும்பத்தினரும் இங்கே இருக் கிறார்களோ?" என்று கேட்டான்.

அக்காவலாளியும் "என் எஜ மானரின் குடும்பத்தைச் சேர்ந்த வர் யாருமே இங்கு இல்லை. அவர் இங்கு தனியாகத்தான் இருக்கிறார். அவர் எப்போதும் தன் அறையில் இருந்து ஏதோ சில ஓலைச் சுவடி களைப் பரிசீலித்துக் கொண்டே இருப்பார். அண்மையில் இங்கு யாரோ பெரிய இடத்துப் பெண் ஒருத்தி வந்திருக்கிறாள். அவள் ஏதோ ஒரு முக்கியமான விஷய மாக என் எஜமானரிடம் கலந்து ஆலோசிக்கத்தான் வந்திருக்க வேண்டும். அவள் வந்த பிறகு இரண்டு நாட்களாகியும் எம் எஜமா னர் தம் அறையைவிட்டு வெளியே வரவில்லை. அதற்குப் பின் அவர் எங்கோ சென்றார். அதனால்தான் அவர் எப்போது வேண்டுமானா லும் திரும்பி வரலாம் என எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறோம்" என்றான்.

யாரோ பெரிய இடத்துப் பெண் அங்கு வந்தாள் எனறு கேட்டதும் மகேந்திரன் யோசனையில் ஆழ்ந் தான். அதுபற்றி அறிய ஆவல் கொண்டு மறுநாள் காலை அங்கி ருந்து கிளம்பிப் போகக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

(தொடரும்)






# யார் வியாபாரி?

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராமல் விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் இந்த வேலையை விடாப் பிடியாகச் செல்வதைப் பார்த்தால் இதை எப்படியாவது உன் வாழ் நாளுக்குள் செய்து முடித்துவிட வேண்டும் என நீ தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. இம்மாதிரியாகப் பலர் தம் சக்திக்கும் மீறி ஆசைப் பட்டு அதைத் தம்மால் செய்ய முடியாமல் தம் மகன்களைச் செய்யச் சொல்வதும் உண்டு. அப்படியும் அவர்கள் எண்ணியது போல நடப்பது இல்லை. இதை விளக்க உனக்கு ரூபசந்திரன் என்பவனின் கதை

## வேதாளம் சொல்லும் கதை



யைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

ஒரு காலத்தில் ரூப நகரில் ரூப சந்திரன் என்ற வியாபாரி இருந்தான். அவன் வியாபாரம் நன்கு நடந்தது. வியாபாரத்தில் லாபம் ஏராளமாகக் கிடைத்து அவன் பல கோடிகளுக்கு அதிபனானான். ஏழையாக ஒருவன் இருந்தால் உறவினர்கள் அவனை ஏறெடுத்துப் பார்க்க மாட்டார்கள். ஆனால் பணக்காரன் ஒருவன் தன் உறவினன் ஏன்றால் இல்லாத சொந்தம் கொண்டாடி அவனை அவர்கள் சுற்றிச் சுற்றி வந்து தமக்கு ஆதாயத்தைத் தேடிக் கொள்வார்கள். எனவே ரூபசந்திரனின் உறவினர்களும் அவனை ஈ போல் மொய்த்துத் தமக்கு ஆதாயம் தேடிக் கொண்டு போனதில் ஆச்சரியம் எதுவும் இல்லையே.

ரூபசந்திரனும் தாராள மனம் படைத்தவன். தன் உறவினன் எனக் கூறிக் கொண்டு தன்னிடம் வருபவனுக்குப் பணத்தைக் கடனாகவோ தருமமாகவோ கொடுக்கலானான். அதனால் அவனது உறவினர்கள் அவனைப் புகழ்ந்து அவனிடம் பணம் அவ்வப்போது பெற்று அதனைத் திருப்பிக் கொடுக்காமல் ஏமாற்றி வந்தார்கள். தன்னைத் தன் உறவினர்கள் ஏமாற்றுகிறார்கள் என அவன் புரிந்து கொண்டபோது அவன் கிழவனாகி விட்டான்.

ரூபசந்திரனுக்கு ஆனந்தன், விநோதன், விவேகன் என்று மூன்று மகன்கள் இருந்தனர். ஒருநாள் அவன் அம்மூவரையும் அழைத்து ''ஒரு வியாபாரிக்கு திறமையோடு சுயநலமும் இருக்க வேண்டும். இப்படி நான் இராமல் எல்லோரையும் நம்பிக் கடன் கொடுத்து மோசம் போய்விட்டேன். கோடி கோடியாக இருக்க வேண்டிய பணம் இப்போது லட்சக்கணக்கில்தான் இருக்கிறது. இதுகூட உங்களது திறமையால்தான் மிஞ்சியுள்ளது. எனவே நான் ஒன்று சொல்லப் போகிறேன். அதைச் செய்வீர்களா?'' என்று கேட்டான்.

மூவரும் பணிவுடன் ''ஒரு வியா




பாரிக்கு சுயநலம் இருக்க வேண்டும் என்பது எங்களுக்கும் தெரியும். உங்கள் போக்கு எங்களுக்கு பிடிக்காதிருந்த போதிலும் உங்கள் மீது கொண்ட மரியாதையால் உங்களை எதிர்த்து எதுவும் நாங்கள் கூறாமல் இருந்து வந்தோம். நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்களோ அதைச் சொல்லுங்கள். அதைச் செய்து முடிக்கிறோம்'' என்றார்கள்.

ரூபசந்திரன் அதைக் கேட்டு மகிழ்ந்து போனான். அவன் அவர்களிடம் "நம் வியாபாரம் சரிவர நடக்காது போவதற்கு இப்போது நாம் இருக்கும் வீட்டின் ராசியே காரணம் என்று எல்லோரும் சொல்கிறார்கள். இந்த வீட்டை நான் சம்பாதித்த பணத்தைக் கொண்டு நானே கட்டினேன். இந்த வீடு எனக்கு மிகவும் பிரியமானது. நான் இந்த வீட்டில்தான் இறக்க விரும்புகிறேன். இந்த வீட்டின் ராசி சரி இல்லை எனப் பலர் கூறும்போது அதைக் கேட்க என் மனம் வேதனைப்படுகிறது. சிலர் இந்த வீட்டை வாங்க வேண்டும் என்பதற்காக இப்படி ஒரு புரளியைக் கிளப்பி இருப்பார்களோ என்று சந்தேகப்படுகிறேன்.. அதனால் இந்த வீட்டின் ராசி நல்ல ராசி என்று நீங்கள் நிரூபித்துக் காட்ட வேண்டும்'' என்றான்.

மூவரும் தந்தை மேற்கொண்டு என்ன சொல்லப் போகிறார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவனும் "நம் வியாபாரம் தொடர்ந்து நடக்க வேண்டும். அதுவும் நன்கு நடக்க வேண்டும். இந்த வீடு ராசியான வீடல்ல என்று சொல்லப்படுவதை நான் ஏற்க மாட்டேன். ஏனென்றால் இந்த வீட்டில் இருந்தபடியே நான் கோடி கோடியாகச் சம்பாதித்ததுதான் உங்கள் யாவருக்கும் தெரியுமே. அதனால்தான் இது ராசியான வீடு என்று நிருபித்துக் காட்ட வேண்டும்'' என்றான்.

ஆனந்தனும் விநோதனும் அப்படியே செய்வதாகக் கூறினார்கள். ஆனால் விவேகனோ "தந்



தையே! நீங்கள் செய்த தவறு என்ன என்பதை நீங்கள் உணர்ந்து விட்ட போதிலும் இனிமேல் உங் கள் போக்கை உங்களால் மாற்றிக் கொள்ள முடியாது. மற்றவர்களி டம் கண்டிப்பாக நடந்து கொள்ள உங்களால் முடியாது. எனவே இனிமேல் நீங்கள் வியாபாரத்தி லிருந்து ஒதுங்கி இருக்க வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்ட ரூபசந்திரனும் சற்று யோசித்துப் பார்த்தான். விவேகன் கூறுவது சரி- என்றே அவனுக்குப் பட்டது. ஆனால் வியா பாரத்தைத் தொடர்ந்து பழைய நிறுவனத்தின் பெயரில் தான் நடத்த வேண்டும். புதிய நிறுவனத் தின் வியாபாரம் பழைய நிறுவனத் தின் பெயரில் நடக்கும் வியாபா ரம் போல அவ்வளவு சிறப்பாக வும் செழுமையாகவும் நடக்க முடி யாது. அதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்து ஒருமுடிவிற்கு வந்தான்.

ரூபசந்திரனும் தான் இனி வியா பாரத்தில் ஈடுபடாமல் ஒதுங்கி இருப்பதாகவே கூறினான். அப் போது விவேகன் ''வியாபாரம் கூட்டாக நடக்காமல் ஒரு கைப்பட நடப்பதுதான் நல்லது. எனவே நீங்கள் எங்கள் மூவரில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவனிடம் வியா பாரப் பொறுப்பை ஒப்படையுங் கள்'' என்றான். ரூபசந்திரனும் ''நீங்கள் மூவரும் திறமைமிக்கவர் களே. அதனால் என் விருப்பத்தை யார் நிறைவேற்ற முன் வருகிறீர் கள்? அவன் என் வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்தட்டும். மற்ற இரு வரும் தனித்தனியாக வியாபாரம் செய்யுங்கள். அதற்கு வேண்டியதை நான் செய்து கொடுக்கிறேன்'' என்றான்.

அப்போது மூன்று மகன்களும் கலந்து ஆலோசித்தார்கள். தாமே வியாபாரத்தை ஆரம்பிப்பதைவிட தந்தை நடத்தி வரும் வியாபாரத் தையே எடுத்து நடத்துவது மேல் என்று ஒவ்வொருவனும் எண்ணி னான். அதனால் அவர்களால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை.

அது கண்டு ரூபசந்திரன் "சரி, நான் ஒரு கேள்வியைக் கேட்கிறேன். அதற்கு உங்களில் யார் சரியான விடையைக் கூறுகிறானோ, அவனே என் வியாபாரத்தைத் தொடர வேண்டியவன் எனத் தீர்மானிக் கிறேன்" என்றான். மூவரும் அதற் குச் சம்மதித்தார்கள்.

அப்போது ரூபசந்திரன் "இப் போது திடீரெனக் கடவுள் உங்கள் முன் தோன்றி உங்களுக்கு என்ன வேண்டும் என்று கேட்டால் நீங் கள் எதைக் கோருவீர்கள்?" என்று கேட்டான். ஆனந்தன் உடனே "இந்த உலகிலுள்ள செல்வம் எல் லாம் என்னிடமே இருக்க வேண்டும் என்ற கேட்பேன்" என்றான். விநோதனும் "உலகத்துச் செல்வங் கள் எல்லாம் நானே உண்டாக்கு பவனாக இருக்க வேண்டும் எனக் கேட்பேன்" என்றான்.

விவேகனோ எதுவும் கூறாமல் இருக்கவே ரூபசந்திரன் அவனைப் பார்த்து "நீ எதைக் கேட்கலாம் என்று யோசித்துக் கொண்டிருக் கிறாயா?" என்று கேட்டான். விவே கனோ "இதில் யோசிக்க என்ன இருக்கிறது? உண்மையிலேயே கட வுள் என் முன் தோன்றினால் நான் மனிதாபிமானம் கொண்ட நல்ல மனிதனாக இருக்க அருள்புரியு மாறு கோருவேன்" என்றான்.

ரூபசந்திரன் "அப்படியென்றால் என்ன? அதை விளக்கிச் சொல்"



எனவே விவேகனும் "உலகில் உள்ள யாவரும் அமைதியுடன் சுக மாக வாழ வேண்டும் என்பது தான் என் விருப்பம்" என்றான். இதைக் கேட்டு ஆனந்தனும் விநோ தனும் சிரித்தார்கள். ஆனால் ரூபசந்திரன் அவனைப் பாராட்டித் தன் வியாபாரத்தை அவனிடம் ஒப்படைத்தான்.

அதைக் கண்டு ஆனந்தனும் விநோதனும் திடுக்கிட்டனர். அப் போது ரூபசந்திரன் அவர்களிடம் "உங்களைப் பற்றி சிறுவயதிலி ருந்தே அறிவேன். மூவரும் திறமை சாலிகளே. ஆனால் வியாபாரத் திற்கு சுயநலமே முக்கியம். அதை அறிவது அவ்வளவு எளிதல்ல.

நான் கேட்ட கேள்வியால் யாரிடம் திறமையோடு சுயநலமும் உள்ளது எனக் காண விரும்பினேன். அது விவேகனிடம்தான் உள்ளது என்று தெரிந்து போயிற்று'' என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! ரூபசந்திரன் திறமை சாலியானாலும் உறவினர்களை நம்பிக் கடன் கொடுத்து தன் பணத்தை இழந்தான். ரூபசந்திரன் வியாபாரத்தை தொடர எண்ணி னான். எனவே பிறர் நன்கு வாழ வேண்டும் எனக் கருதிய விவே கனிடம் ரூபசந்திரன் தன் வியா பாரத்தை ஒப்படைத்தது சரியான முடிவா? விவேகன் கூறியதில் சுய நலம் என்பது தெரியவில்லையே. எனவே ரூபசந்திரனின் முடிவு தவறுதானே. இந்த சந்தேகத்திற்கு நீ சரியான பதிலைத் தெரிந்திருந் தும் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''உலகில் பிழைக் கத் தொழில் செய்பவர்கள் பலவித மாகச் செயல்படுகிறார்கள். அவர் களது திறமை ஒன்றுபோல இருப் பது இல்லை. அவரவர் மனநிலை யைப் பொறுத்து அவர்கள் சமயத் திற்கு ஏற்ப முடிவு எடுக்கிறார்கள். ரூபசந்திரன் கேட்ட கேள்வியால் ஆனந்தனும் விநோதனும் முழு சுயநலக்காரரர்கள் என்பது தெரிந்து போயிற்று. இப்படி இருந்தால் வியாபாரம் நடக்காது. பிறரும் வாழ்ந்து தானும் வாழ வேண்டும் என விவேகன் நினைத்தான். எந்த அளவிற்கு சுயநலம் இருக்க வேண் டுமோ அது விவேகனிடம் இருப் பது கண்டே ரூபசந்திரன் தன் வியா பாரத்தை அவனிடம் ஒப்படைத் தான். இது சரியான முடிவே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






# அவரது யுக்தி

பசுபதி சாஸ்திரி தலைநகரில் மன்னனால் கௌரவிக்கப்பட்டு ஆயிரம் வராகன்கள் பரிசு பெற்றார். அவர் அதனைப் பையில் போட்டு எடுத்துக் கொண்டுதான் ஊருக்குத் திரும்பலானார். வழியில் அவரது தமையன் கணபதி சாஸ்திரியின் ஊர் வரவே அவர் தன் அண்ணன் வீட்டில் தங்கி செல்லத் தீர்மானித்துக் கொண்டார்.

கணபதி சாஸ்திரி வறுமையில் கஷ்டப்பட்டார். குடும்பம் நடத்துவதற்கே மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். இந்த சமயத்தில் தன் தம்பி ஆயிரம் வராகன்களுடன் தன் வீட்டிற்கு வந்ததும் அவர் மனதில் கெட்ட எண்ணம் தோன்றியது. அதனால் அன்றிரவு தன் தம்பி படுத்துத் தூங்கும் போது கணபதி சாஸ்திரி தம் தம்பியின் பணப் பையை எடுத்து வீட்டில் ஓரிடத்தில் ஒளித்து வைத்தார்.

மறுநாள் காலையில் எழுந்த பசுபதி தன் பணப்பை காணாது போனது கண்டு திகைத்து அது பற்றி தன் அண்ணனிடம் கூறினார். கணபதியும் "அப்படியா! பணப் பையா போய் விட்டது? அதிசயமாக இருக்கிறதே!" என்றார். பசுபதி அவர் பேசியவிதத்திலிருந்து தன் பையைத் தன் அண்ணன் தான் திருடிவிட்டார் என்று தெரிந்து கொண்டார்.

அவர் உடனே அந்த கிராமத்து அதிகாரியைக் கண்டு விஷயத்தைக் கூறி "என் அண்ணனின் பெயர் கெடாமல் எனக்கு என் பணம் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். கிராம அதிகாரியும் சற்று யோசித்து "சரி இதற்கு ஒரு வழி கண்டுபிடித்து விட்டேன்" என்றார்.

—சா. வெங்கடராமன்—

சற்று நேரத்திற்குப் பின் ஊர்த் தலையாரியும் வெட்டியானும் கண பதி சாஸ்திரியின் வீட்டிற்குப் போய் அவரை கிராம அதிகாரி கூப்பிடுவ தாகச் சொன்னார்கள். கணபதி சாஸ்திரியும் கிராம அதிகாரியைக் காணச் சென்றபோது அங்கு தன் தம்பி பசுபதி குற்றவாளி போல் நிற்பதைக் கண்டார். கிராம அதி காரியும் "இந்த உங்கள் தம்பி அரண்மனையிலிருந்து ஆயிரம் வராகன்களைத் திருடிக் கொண்டு வந்திருப்பதாகத் தகவல் வந்திருக் கிறது. இவர் உங்கள் வீட்டில் தங்கி யதால் உங்கள் வீட்டைச் சோதனை போட வேண்டி இருக்கிறது. நீங் கள் கௌரவமானவர். விஷயத்தை நீங்கள் போய் உங்கள் மனைவி மக்களிடம் சொல்லி தைரியமாய் இருக்கச் சொல்லுங்கள்" என்றுகூறி அவரை அனுப்பினார்.

கணபதி சாஸ்திரியும் உடனே வீட்டிற்கும் போய்தான் எடுத்த பணப் பையைக் கொண்டு வந்து பசுபதியின் துணிமணிகளோடு வைத்து விட்டார். கிராம அதிகாரி யின் ஆட்கள் வந்து அந்தப் பையை எடுத்துக் கொண்டு போய் கிராம அதிகாரியிடம் கொடுத்தார்கள். கணபதியும் நல்ல வேளையாகத் தான் தப்பியது நினைத்து கிராம அதிகாரியின் வீட்டிற்கு சென் றார்.

அப்போது கிராம அதிகாரி அந் தப் பணப் பையை பசுபதி சாஸ்திரி யிடம் கொடுத்து "அரண்மனை யில் திருடு போன பணம் கிடைத்து விட்டது. திருடியது வேறு யாரோ வாம். இது இவருக்குக் கொடுத்த பரிசுப் பணமாம். முதலில் தவறான தகவலை எனக்கு அனுப்பி விட்டார் களாம்" என்றார்.

பசுபதி சாஸ்திரி தன் பையை வாங்கிக் கொண்டு கணபதி சாஸ் திரியின் வீட்டிற்குப் போய்த் தன் துணிமணிகளை எடுத்துக்கொண்டு தன் அண்ணனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்.



# அம்புலிமாமா அனுபந்தம்—48



<u>நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:</u>

## குட்டைக் கரடி

ஆஸ்திரேலியாவிலுள்ள கோலா ரகக் கரடிபோல நம் நாட்டில் குள்ளக் கரடிகள் உள்ளன. இவை பார்க்க மிக அழகாய் இருக்கும். பழுப்பு நிறத்தில் 60செ.மீ. உயரமும் 40 செ.மீ. நீள வாலும் இது கொண்டிருக்கும். இதன் காதுகள் சற்று உயர்ந்து அகலமாய் இருக்கும். சற்றுப் பருமனாயும் வால் வளைந்தும் நீல நிறத்தில் இருக்கும். உடலின் அடிப்பகுதி கருப்பாயும் தலை வெள்ளையாயும் இருக்கும்.

வடஇந்தியாவின் உயர் மலைப் பகுதிகளில் காணப்படும் இவை பகலில் மரக் கிளைகளின் மீது படுத்துச் சுகமாய்த் தூங்குகின்றன. இரவில் உணவு வேட்டைக்குக் கிளம்புகின்றன. இவை பழங்கள், கிழங்குகள், மூங்கில் குச்சிகள் ஆகியவற்றை உண்கின்றன. சில சமயங்களில் பறவைகளின் முட்டைகளையும் சாப்பிட்டு விடுகின்றன. இவற்றின் உடலிலிருந்து கிடைக்கும் ரோமம் கம்பிளியாக மிக விலை உயர்ந்தது.

குள்ளக் கரடி பொம்மை என்றால் குழந்தைகள் மிகவும் விரும்புகிறார்கள். நமது முன்னாள் பிரதமர் நேரு 'தீன்மூர்த்தி பவனத்தின் பூங்காவில்' இவற்றை வளர்த்து விளையாடி வந்தார்.



# நம் தற்கால இலக்கியம்

*பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளி யாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.*

*ஆசிரியர்*

## தாராசங்கர் பந்தோபாத்யாயாவின் 'கண தேவதை'




வங்காளத்து ஒரு கிராமத்தின் பின்னணியில் 1920ல் நடந்ததாக எழுதப்பட்டது இப்புதினம்.

சிவபூரில் வாழும் ஸ்ரீஹரி மிகவும் சுயநலம் கொண்டவன். பிறரை வஞ்சித்துத் தான் பணக்கார னாகி ஊரில் பெரிய மனிதன் என்ற பெயரை அடைய ஆசை கொண்டான். அதனால் தன்னை எதிர்க்க முற்பட்டவர்களை இரக்கமில்லாமல் ஒழித்து வந் தான். தன் சுயநல விருப்பங்களுக்கு துணை போகாத ஏழைகளின் குடிசைகளை எரித்து விடுவான்.

இப்படி இரக்கமற்ற ஸ்ரீஹரி ஒருமுறை ஏழைகள் சிரமப்படும்போது, அவர்களுக்கு உதவினான். இதனால் கிராமத்து மக்கள் அவனைப் புகழ்ந்தார் கள். இதனால் ஒரேயடியாக மகிழ்ந்து போன அவன் தான் ஊரில் பெரிய மனிதனாக வேண்டும் என்ற ஆசையை மேலும் வளர்த்துக் கொண்டான்.

அச்சமயத்தில் கிராம மக்களிடையே புதிய எண்ணங்கள் மலரலாயின. தாம் செய்யும் வேலைக் குத் தகுந்த ஊதியம் கொடுக்காவிட்டால் தாம் வேலை களைச் செய்ய முடியாது என்று கொல்லன், நாவி தன், தட்டான் போன்றவர்கள் கூறிவிட்டார்கள். இதனால் கிராமத்தில் அவ்வப்போது சண்டை சச்சரவுகள் தலைதூக்கலாயின.

கிராமத்து மக்களில் பெரும்பாலானோர் ஆசாபாசங்களுக்கு அடிமையாகி விடுவது இயல்பே. ஆனால் ஒரு சிலர் உயர் நோக்கங்களை தம் குறிக்கோளாகக் கொள்வதும்



உண்டு. அப்படிப்பட்டவர்களில் ஆசிரியர் தேவ் ஒருவர். நற்குணங்களுக்கும் துணிச்சலுக்கும் பெயர் போனவர். இவரைப்போல டாக்டர் ஜகனும் இருந்தார். அவர் ஏழை எளியவர்களுக்கு வைத்தியம் பார்த்ததோடு சமூக உயர்விற்கு அரும்பாடுபட்டு வந்தார்.

ஒருநாள் கிராமத்து நிலங்களை அளந்து கணக்கிட அரசாங்க அதிகாரிகள் வந்தார்கள். அவர்களில் ஒருவன் தேவிடம் தகாத முறையில் நடந்து அவர் மீது பொய் வழக்கும் போட்டான். அப்போதே மக்கள் அன்னியர் ஆட்சிக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கிக் கொண்டிருந்தார்கள். அதனால் போலீசார் தேவைக் கைது செய்ய வந்தபோது கிராம மக்கள் அவரைப் புகழ்ந்து கோஷங்கள் எழுப்பினார்கள்.

சிறைத் தண்டனை பெற்ற தேவ் ஒரு வருடத்திற்குப்பின் விடுதலையானார். அவரைக் கண்டு அவரது கிராம மக்கள் பெரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். அப்போது அவ்வூருக்கு ஜதின் என்ற இளைஞன் வந்தான். அவன் புரட்சிக்காரன். முந்தைய ஜமீன்தாரரிடமிருந்து நிலங்களை வாங்கிய ஸ்ரீஹரி அவ்வூரின் புதிய ஜமீன்தாரராகி விட்டான். கிராமத்தில் யார் பேரிலும் பட்டா இல்லாத பொட்டல் நிலங்கள் சட்டப்படி ஜமீன்தாரருக்கே சொந்தம். ஆயினும் கிராம மக்கள் தம் ஆடு மாடுகளை அங்கு மேயவிடுவது வழக்கம். அங்குள்ள மரங்களைப் பொதுச் சொத்தாகவே கருதி வந்தார்கள்.

புதிய ஜமீன்தாரர் அந்த மரங்களைத் தன் சொந்த உபயோகத்திற்கு வெட்டிப் போடலானான். கிராம மக்கள் இதனை எதிர்க்கவே கைகலப்பு மூண்டது. அதில் தேவ் காயமுற்றார். அன்றிரவே ஸ்ரீஹரியின் தோட்டத்தில் நடப்பட்ட செடிகளை யாரோ பிடுங்கி நாசப்படுத்தி விட்டார்கள். அந்தக் குற்றம் தேவின் மீது சுமத்தப்பட்டது. அவரைக் கைது செய்ய மறுபடியும் போலீஸ் வந்தது. ஆனால் உண்மைக் குற்றவாளியான கிராமத்து கொல்லன் அனிருத்தன் தானே குற்றவாளி என ஒப்புக் கொண்டதால் போலீஸ் தேவை விட்டு அவனைப் பிடித்துக் கொண்டு போயிற்று.

திடீரென அக்கிராமத்தில் காலரா நோய் பரவியது. பலர் இறந்தனர். இறந்தவர்களைத் தகனம் செய்ய தேவ் உதவினார். அவர் வீடு திரும்பியதும் காலரா கிருமிகள் அவரது குழந்தையை பற்றிக் கொண்டன. அவரது குழந்தை இறக்க அடுத்து அவரது மனைவியும் காலரா நோயால் மாண்டு போனாள்.

தேவ் தனியாளானார். ஜதின் அவ்வூரை விட்டுப் போக வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. அதனால் தேவுக்கு யாருமே இல்லை என்றாகியது. ஆனாலும் வாழ வேண்டுமே! வாழ்க்கையே போராட்டங்களைக் கொண்டதுதானே. சாதாரண சிறிய தேவைகளுக்காகப் போரிடுவதை விட உயரிய குறிக்கோளை அடையப் போராட்டம் நடத்துவதில்தான் மனநிறைவு ஏற்படுகிறது என்பதை நாவலாசிரியர் இப்புதினத்தில் விளக்கியுள்ளார்.

தாராசங்கர் பந்தோபாத்தியாயா *(1898-1971)* வங்க மொழியில் எவ்வளவோ கதைகளையும், புதினங்களையும் எழுதிப் புகழ் பெற்ற எழுத்தாளர். அவர் எழுதிய 'கண தேவதை' என்ற இந்த நாவலுக்கு *1976*ல் ஞானபீட விருது கிடைத்தது.

# உங்களுக்குத் தெரியுமா?

1. உலகில் ஆற்றின் நடுவே மலை மீது இரண்டே இரண்டு இடங்களில்தான் பழங்காலப் பொருள்களின் அருங்காட்சியகங்கள் உள்ளன. ஒன்று, எகிப்திலுள்ள அபுசிங்கலில், மற்றது நம் நாட்டில். அது எங்கே?
2. ஒரு நகரருகே உள்ள மலை மீதுள்ள ஆலயத்திற்குப் போக ஆயிரம் படிகள் உள்ளன. அந்த ஆலயம் எது?
3. தபால் தலைகளில் தன் பெயரைப் பொறித்த நாடு எது?
4. நம் தேசியக் கொடியின் நடுவே உள்ள சின்னம் எது?
5. மியான்மாரில் புழக்கத்தில் உள்ள நாணயம் எது?
6. செஞ்சிலுவைச் சங்கத்தை நிறுவியவர் யார்?
7. எல். இ. வாட்டர்மென் எதனால் பெயர் பெற்றவர்?
8. சீக்கியர்களின் ஒன்பதாவது மதகுரு யார்?
9. அமீர்குஸ்ரோ உபயோகித்த இசைக் கருவி எது?
10. நம் நாட்டில் முந்திரியை அதிகமாக ஏற்றுமதி செய்யும் மாநிலம் எது?
11. ஐபில் டவர் எங்கே உள்ளது.? அதை அமைத்தவர் யார்?
12. புகழ்பெற்ற டாக்டர் சாமுவேல் ஜான்சனின் வாழ்க்கை வரலாற்றை எழுதியவர் யார்?
13. நம் நாட்டில் முதன் முதலில் நாணயங்கள் எப்போது வழக்கில் கொண்டு வரப்பட்டன?
14. ஒரு தேசபக்தர் சிறையில் உண்ணாவிரதம் மேற்கொண்டு அங்கேயே இறந்தார். அவர் யார்?
15. பசுமைப் புரட்சி என்றால் என்ன?

# விடைகள்

1. ஆந்திர மாநிலத்து நாகார்ஜுன மலை
2. மைசூரருகேயுள்ள சாமுண்டீஸ்வரி ஆலயம்.
3. கிரேட்பிரிட்டன்
4. அசோக சக்கரம்
5. கியாட்
6. ஜான்ஹென்றி ட்யூராண்ட்
7. பௌண்டன் பேனாவை கண்டுபிடித்தவர்.
8. குருதேஜ் பகதூர்
9. சரோட்
10. கேரளம்
11. பாரீஸ் நகரில் 935 அடி உயர இக்கோபுரத்தை 1887-89ல் கஸ்டவ் ஐபில் நிறுவினார்.
12. ஜேம்ஸ் பாஸ்வெல்
13. கி. மு. ஐந்தாவது நூற்றாண்டு
14. ஜதின்தாஸ்
15. வேளாண்மை அபிவிருத்தி



# மேதாவி நானே!

சந்திரன் என்ற இளைஞன் மிகவும் கெட்டிக்காரன். எதையும் எளிதில் புரிந்துகொள்ளும் ஆற்றல் கொண்டவன். அபார ஞாபக சக்தி கொண்டவன். அதனால் ஊரார் அவனை மேதாவி என்று புகழ்ந்தனர். ஆனால் அவனது தந்தையோ "இந்த ஊரில் மகாமேதாவி பண்டிதர் பரமசிவம். அவர் உன்னைப் பாராட்டினலே நீ மேதாவி எனக் கருதமுடியும்" என்றார்.

அதுகேட்டுச் சந்திரன் உடனேயே பண்டிதர் பரமசிவத்தைக் காணச் சென்றான். பரமசிவமும் அவனிடம் பல கேள்விகளைக் கேட்டு "பேஷ்! நீ எல்லாமே நன்கு தெரிந்து வைத்திருக்கிறாய். இந்த ஊர்ப் பிரமுகர்களை எல்லாம் ஒருநாள் ஓரிடத்தில் கூட்டி நாம் இருவரும் போட்டி போடுவோம். இதில்கூட நீதான் வெற்றி பெறுவாய் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்றார்.

அதுகேட்டு சந்திரன் ஓரேயடியாக மகிழ்ந்து போனான். வீட்டிற்கு ஓடிப்போய்த் தன் தந்தையிடம் அவன் பரமசிவம் கூறியதைச் சொல்லவே அவனது தந்தையும் "ஓ! பரமசிவம் புகழ்ந்தான் என்று மகிழ்ந்து விடாதே. அவன் ஏதோ ஒரு காரணத்தால் இப்படிச் சொல்லி இருக்கிறான்" என்றார்.

சந்திரனோ தன் தந்தை கூறியதை லட்சியம் செய்யவில்லை. குறித்த நாளில் அந்தப் போட்டி நடக்கும் இடத்தில் ஏராளமாக மக்கள் கூடி விட்டார்கள்.

பரமசிவம் முதலில் தன்னிடம் கேள்விகளை கேட்குமாறு சந்திரனிடம் கூறினார். சந்திரனும் "சூரியனுக்கு ஒளி எங்கிருந்து கிடைத்தது?" என்று கேட்டான்.

—எஸ். சோபினி—

அதைக்கேட்ட பரமசிவம் முகத்தைச் சுளித்தவாறே "இதோ பார். இந்தக் கேள்வியின் விடையைப் புரிந்து கொள்ள ஆழ்ந்த அறிவு வேண்டும். இப்படிப்பட்ட அறிவை எல்லோரிடமும் காண முடியாது. விடை சரியா என்று பார்க்க நாம் சூரியனிடம் செல்லவும் முடியாது. அப்படிப் போனாலும் உயிருடன் திரும்பி வர முடியாது. விஞ்ஞானத்தின் அடிப்படையிலோ சாஸ்திரங்களின்படியோ சூரியனுக்கு ஒளி கிடைக்கும் விதம் பற்றிக் கூறினால் அதைப் புரிந்து கொள்ள இங்கு உன்னையும் என்னையும் தவிர வேறு யாரும் இல்லை. இங்குள்ள மக்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் நம் கேள்வி பதில் இருக்க வேண்டும் என்று உன் அறிவில் படவில்லையா?" என்று கேட்டார்.

அதுகேட்டு சந்திரன் திகைத்துப் போய் நின்றான். சில நொடிகளுக்குப் பின் அவன் பரசிவத்திடம் "சரி, நீங்கள் ஒரு கேள்வியைக் கேளுங்கள்" என்றான். அப்போது அவர் "சந்திரனுக்கு ஒளி எங்கிருந்து கிடைக்கிறது?" என்று சந்திரனிடம் கேட்டார். சந்திரனோ "சற்று முன்தானே நீங்கள் நம் கேள்வி பதில் இங்குள்ளவர்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் இருக்க வேண்டும் என்று கூறினீர்கள். அதை மறந்து விட்டீர்களா?" என்று கேட்டான்.

பரமசிவமும் "இந்தக் கேள்விக்கான பதில் இந்த ஊரில் யாரைக்



கேட்டாலும் தெரியும். நீ இவ்வூரா ருக்கு எதுவுமே தெரியாது என்று நினைத்து விட்டாயா? சந்திரன் சூரியனிடமிருந்து ஒளிபெற்று அதைப் பிரதிபலிக்கிறான் என்பதை ஒரு வேளை நீ அறியாமல் போனா லும் இவ்வூரில் எல்லோருக்கும் தெரியும். என்ன ராமசாமி! உனக்கு இது தெரியும் அல்லவா? கிருஷ்ணா! இதை நீ அறிவாய் அல்லவா? கோவிந்தா! இது உனக் குத் தெரிந்ததுதானே'' என்று அங் கிருந்த சிலரிடம் கேட்டார். அவர் களும் தமக்குத் தெரியும் என்று தலையை ஆட்டினார்கள்.

அப்போது சந்திரன் ''அப்படி யானால் சற்று முன் விஞ்ஞானம், சாஸ்திரம் பற்றி நாம் இருவரே அறிந்தவர்கள் என ஏன் கூறினீர் கள்?'' என்று கேட்டான். பரமசிவ மும் ''இதோ பார். இந்த ஊரில் நாம் இருவர் மட்டும் படித்து மேதாவிகளாகி விடவில்லை. இன்னும் சிலரும் இருக்கலாம். நீ என்னமோ உன்னை விட்டால் இந்த ஊரில் மேதாவியே இல்லை என்று கர்வப்பட்டுக் கொண்டிருக் கிறாய். ஊராரை மக்கு என நினைக்கிறாய். இந்தச் சிறு வயதில் நீ தலைகால் தெரியாமல் துள்ளக் கூடாது. மேதாவியாகவும் ஆகிவிட முடியாது'' என்றார்.

ஊராரும் சந்திரனைக் கேலி செய்தார்கள். அவனுக்கு அவமான மாகப் போய் விட்டது. அவன் வீட்டை அடைந்ததும் அவனது



தந்தை "நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டாயா?" என்று கடிந்து கொண்டார்.

சந்திரனும் "பரமசிவம் இப்படிப் பட்டவர் என நான் நினைக்க வில்லை. அவருக்குத் தக்க பாடம் கற்பிக்கிறேன் பாருங்கள்" என்றான். அன்று முதல் அவன் பரமசிவத்தின் நூல்களிலுள்ள பிழைகளை எடுத்துக் கூறினான். அவரது பேச்சில் குறைகளைக் காட்டினான். அவருக்கு எதிராகப் பிரசாரம் செய்யலானான்.

ஊராரில் சிலர் பரமசிவத்திடம் சென்று சந்திரன் அவரை இகழ்வது பற்றிக் கூறினார்கள். பரமசிவம் அமைதியாக "சந்திரன் நல்ல அறிவாளிதான். என் குறைகளை அவன் எடுத்துக் காட்டுவதால் எனக்கு அவன் நன்மையே புரிகிறான். அதனால் நான் என்னைத் திருத்திக் கொள்ள முடிகிறது. இல்லாததும் பொல்லாததும் அவன் கூறினால் அது அவனது கீழ்த்தர புத்தியை காட்டுகிறது" என்றார்.

அவர்கள் பரமசிவத்தின் பெருந்தன்மையைப் பாராட்டியவாறே சென்றார்கள். இவர்கள் போனதும் அவரது மனைவி "இப்போது போல முன்பும் நீங்கள் நடந்து கொண்டிருந்தால் சந்திரன் உங்களுக்கு எதிராகப் பிரசாரம் செய்து கொண்டிருக்க மாட்டானே" என்றாள்.

பரமசிவம் புன்னகை புரிந்தவாறே "அவன் இவ்வாறு செய்ய வேண்டும் என்றுதான் அன்று எல்லோர் முன்பும் அவனை மட்டம் தட்டினேன். அதனால் அவன் ஆத்திரப்பட்டு எனக்கு எதிராகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்துவிட்டான். ஆத்திரம் அறிவை அழிக்கும். சிறந்த அறிவாளியான அவன் தாழ்ந்து போனான். எனவே இவ்வூரில் நான் ஒருவனே மேதாவி. புரிந்ததா இப்போது?" என்றார்.





# கடித ரகசியம்

பனையூரில் பஞ்சாட்சரம் என்ற நாட்டு வைத்தியர் இருந்தார். அவர் ரண சிகிச்சை நிபுணர். எத்தகைய புண்களையும் காயங்களையும் விரைவில் ஆற்றிவிடக் கூடியவர். அவரது புகழ் எங்கும் பரவி இருந்தது. அவரிடம் தினமும் பல நோயாளிகள் வந்து சிகிச்சை பெற்றுப் போனார்கள்.

அந்நாட்டு மன்னன் முதுகில் ராஜபிளவை ஏற்பட்டு அதனால் அவஸ்தைப் படலானான். எவ்வளவோ வைத்தியர்கள் முயன்றும் அப்பிளவையைப் போக்கி குணப்படுத்த முடியவில்லை. அப்போது சிலர் பஞ்சாட்சரத்தைப் பற்றிக் கூறி அவரை வரவழைத்து வைத்தியம் செய்து பார்க்கலாமே என்று கூறினார்கள்.

மன்னனும் "சரி. இந்த நாட்டு வைத்தியனாலா என் ராஜபிளவை மறையப் போகிறது? எனக்கு நம்பிக்கை இல்லை. பத்தோடு பதினொன்று என்று இவரிடமும் வைத்தியம் செய்து கொள்கிறேன்" என்றான். உடனே தனக்கு வைத்தியம் செய்ய அரண்மனைக்கு வருமாறு ஒரு கடிதம் எழுதி மன்னன் சில வீரர்களிடம் கொடுத்து அனுப்பினான்.

வீரர்கள் கடிதத்தை எடுத்துக் கொண்டு பனையூருக்குப் போய்ப் பஞ்சாட்சரத்திடம் அதைக் கொடுத்தார்கள். பஞ்சாட்சரமும் அதைப் படித்து விட்டுச் சற்று யோசித்து "மன்னருக்கு என் வைத்தியத்தில் நம்பிக்கை இருந்தால் அவர் இங்கே வரட்டும். அப்போது நான் வைத்தியம் செய்கிறேன்" எனப் பதில் கூறி அனுப்பி விட்டான்.

தலைநகர் போய் மன்னனிடம் அவ்வீரர்கள் வைத்தியர் சொன்ன

—சிவனார் செல்வன்—



தைக் கூறவே மன்னனின் பக்கம் நின்ற சேனாதிபதி கோபம்கொண்டு "ஒரு பட்டிக்காட்டானுக்கு இவ்வளவு திமிரா? இப்போதே வீரர்களை அனுப்பி அந்த வைத்தியனை இழுத்து வரச் சொல்கிறேன். உத்திரவு கொடுங்கள்" என்றான்.

மன்னனோ "வேண்டாம். திறமை மிக்கவர்கள் இப்படிக் கூறுவதில் ஆச்சரியம் இல்லையே. நாமே அங்கே போவோம். எப்படியாவது என் நோய் குணமானால் சரி. பல்லக்கைத் தயார்படுத்திக் கொண்டு வாருங்கள்" என்றான்.

பல்லக்கு வந்ததும் மன்னன் அதில் உட்கார, சேனாதிபதி தன் வீரர்களோடு அவனுடன் பனையூருக்குச் சென்றான். பனையூர் எல்லையில் கூடாரம் போட்டு அவர்கள் தங்கினார்கள்.

சேனாபதி ஊருக்குள் போய் வைத்தியரைக் கண்டு "என்னப்பா வைத்தியா! மன்னர் இவ்வூருக்கு வந்து விட்டார். அவரை உன் எட்டடுக்கு மாளிகைக்கு அழைத்து வரட்டுமா?" என்று கேலியாகக் கேட்டான். பஞ்சாட்சரமும் "வேண்டாம். நானே அவர் இருக்கும் இடத்திற்கு வருகிறேன்" எனக் கூறிக் கிளம்பினான்.

பஞ்சாட்சரம் மன்னனைக் கண்டு பரிசோதித்து விட்டு "அரசே! இந்த ராஜ பிளவையை இரண்டு வாரத்திற்குள் குணப்படுத்தி விடுகிறேன். ஆனால் நீங்கள் பத்தியமாக இருக்க வேண்டும். நான் தயாரித்து அனுப்பும் பத்திய உணவையே உண்ண வேண்டும்" என்றான். மன்னனும் அதற்கு இணங்கவே பஞ்சாட்சரம் சிகிச்சையை ஆரம்பித்தான்.

ஒரே வாரத்தில் ராஜபிளவை மறைந்தது. மேலும் ஒரு வாரத்தில் முதுகுப் பகுதியில் ஏற்பட்டிருந்த வலியும் மறைந்தது. அது கண்டு மன்னன் மகிழ்ந்து "ஆகா! நீங்கள் உண்மையிலே மாபெரும் வைத்தியர்தாம். உங்களுக்கு எவ்வளவு பணம் வேண்டுமோ கேளுங்கள். கொடுக்கிறேன்" என்றான்.

பஞ்சாட்சரமும் "அரசே! எனக்கு

பணம் வேண்டாம். பகவானின் கிருபையால் எனக்கு இந்த வீடும் கொஞ்ச நிலபுலன்களும் உள்ளன. இதனால் நான் சுகமாகவே வாழ்கிறேன். ஆனால் நான் கேட்பது வேறு ஒன்று. அதைத்தாங்கள் ஏற்பீர்களா?'' என்று கேட்டான்.

மன்னனும் ''ஆகா! தாராளமாக நீங்கள் எதைக் கேட்டாலும் நிறைவேற்றுகிறேன்'' என்றான். பஞ்சாட்சரமும் ''நீங்கள் இங்கு வந்தபோது மூடு பல்லக்கில் அமர்ந்து வந்தீர்கள். ஆனால் நீங்கள் இங்கிருந்து போகும்போது உங்களது ரதத்தில் அமர்ந்து செல்ல வேண்டும் என்று வேண்டுகிறேன். அரண்மனைக்குப் போனபின் என் இந்தக் கடிதத்தைப் பிரித்துப் படிக்கும்படி வேண்டுகிறேன்'' எனக் கூறி ஒரு கடிதத்தையும் கொடுத்தான்.

மன்னனும் அவன் கோரியபடி தன் ரதத்தில் அமர்ந்து தலைநகருக்குச் செல்லலானான். பாதை மேடும் பள்ளமுமாய் குண்டும் குழியுமாக இருந்தது. தேர் மன்னனை உலுக்கிப் போட்டவாறே அப்படியும் இப்படியும் அசைந்தவாறே சென்றது. அப்போது சேனாதிபதி ''இதென்ன! வைத்தியம் செய்துவிட்டு இந்தப் பஞ்சாட்சரம் இப்படி ஒரு தண்டனையை ஏன் கொடுக்க வேண்டும்?'' என்று வெறுப்புடன் கூறினான்.

மன்னனோ ''இதற்கு ஏதாவது ஒரு நோக்கம் இருக்க வேண்டும். அரண்மனைக்குப் போய் அவன்



கொடுத்த கடிதத்தில் என்ன எழுதப் பட்டுள்ளது என்று படிக்கும் முன் அதில் என்னால் இப்போது ஊகிக்க முடிகிறது" என்றான்.

அரண்மனையை அடைந்ததும் மன்னன் தன் அமைச்சரிடம் "பனையூர் வட்டார அதிகாரியை வரச் சொல்லுங்கள். அவன் அரசாங்கப் பணத்தைத் தன் சொந்த உபயோகத்திற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறான். விசாரிப்போம்" என்றான்.

அமைச்சரும் அந்த அதிகாரியை வரவழைக்கவே மன்னனும் "பனையூருக்குப் போகும் பாதையைச் செப்பனிட்டதாகக் கணக்குக் காட்டினாயே. ஆனால் அதைச் செப்பனிடவில்லை. இது பற்றி அந்த கிராம அதிகாரி புகார் செய்தபோது நான் நம்பவில்லை. ஆனால் நேரில் கண்டபோதுதான் உண்மை என்று தெரிந்தது. உண்மையைச் சொல்" என்று கேட்டான். அந்த அதிகாரியும் தான் அந்தப் பணத்தை அந்த வேலைக்குப் பயன்படுத்தவில்லை என ஒப்புக்கொள்ளவே மன்னன் அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டான்.

பிறகு வைத்தியனின் கடிதத்தை சேனாதிபதியிடம் மன்னன் கொடுத்துப் படிக்கச் சொன்னான். அதில் "அரசே! தங்களுக்கு தான் கொடுத்த கஷ்டத்தை மன்னிக்கவும். இப்படிக் கஷ்டப்பட்டுக் கொண்டுதான் என்னைக் காண நோயாளிகள் தினமும் வருகிறார்கள். அவர்கள் எவ்வளவு சிரமப்படுவார்கள் என்பதைத் தாங்கள் இப்பொது உணர்ந்திருப்பீர்கள்! அவர்களுக்கு உதவ வேண்டுகிறேன்" என்றிருந்ததை அவன் படித்தான்.

"இப்போது தெரிந்ததா அந்த வைத்தியர் எப்படிப்பட்டவர் என்று? அவர் தனக்காக வாழவில்லை. பிறருக்காக வாழ்கிறார்" என மன்னன் கூறி உடனே பனையூருக்குப் போகும் பாதையை செப்பனிடச் செய்தான்.






**வி**பீஷணன் கூறியது கேட்டு அவனை இராமர் ஏதோ விளக்கம் கேட்பது போல் பார்க்கவே விபீஷணனும் "நீங்கள் வீணாக ஏன் இப்படி வருத்தப்படுகிறீர்கள்? இதனால் எங்களுக்கும் வருத்தம் ஏற்படுகிறது. இது கண்டு ராட்சஸர்சள் தாம் மகிழ்ந்து போவார்கள். நீங்களோ அரக்கர்களை வென்று சீதையை மீட்டுப் போகத்தான் வந்திருக்கிறீர்கள். அதைச் செய்யுங்கள். லட்சுமணனை இப்போதே நிகும்பலைக்கு அனுப்பி இந்திரஜித்தை யாகம் செய்யவிடாமல் தடுக்கச் செய்யுங்கள். அந்த யாகத்தைக் தடுப்பவனால்தான் இந்திரஜித்தைக் கொல்ல முடியும். இந்திரஜித் மட்டும் அந்த யாகத்தைச் செய்து முடித்தால் அவனை நம்மால் வெல்லவே முடியாது. அவன் பிரம்ம தேவனிடம் இந்த வரத்தைப் பெற்றிருக்கிறான். இந்திரஜித் இறந்தால் இராவணனின் சப்தநாடியும் ஒடுங்கிவிடும்" என்றான்.

இராமரும் விபீஷணன் கூறியதை ஏற்று இலட்சுமணனை நிகும்பலைக்கு அனுப்பினார். இலட்சுமணனுடன் விபீஷணனும் வானர வீரர்களும் சென்றார்கள். அனுமாரும் இலட்சுமணனோடு புறப்பட்டார்.

இலட்சுமணன் உறுதியான வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டும் கவசம் தரித்தும் இந்திரஜித்தை எதிர்க்கச் சென்றான்.

—இந்திரஜித்தும் மாண்டான்—



விபீஷணனும் வில்லும் அம்புகளும் எடுத்துக்கொண்டு சென்றான். அவர்கள் நிகும்பலையை அடைந்த போது அங்கு ராட்சஸர்கள் அணி வகுத்து நின்று யாகசாலையைக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

அப்போது விபீஷணன் இலட்சுமணனிடம் "இந்திரஜித் இந்த யாகத்தைச் செய்து முடிக்கவிடாமல் செய்ய நம் வானர சேனை இந்த ராட்சஸப் படையைத் தாக்க வேண்டும். இவர்களை அழித்தால் இந்திரஜித் நமக்குத் தென்படுவான். அப்போது நீ அவனோடு போர் புரிந்து அவனைக் கொல்லலாம்" என்றான்.

அதுகேட்டு இலட்சுமணன் வானரர்களுக்கு ராட்சஸப் படையைத் தாக்கி அழிக்கும்படிக் கட்டளை இட்டான். தாக்குதல் மிகக் கடுமையாயிற்று. திடீரெனத் தன் படை தாக்கப்பட்டு ஒரே கூச்சல் ஏற்பட்டது கேட்டு இந்திரஜித் யாகத்தை முடிக்காமலேயே எழுந்து வந்தான். அவன் தன் ரதத்தில் அமர்ந்து வானரர்களை எதிர்க்கலானான்.

விபீஷணனும் இலட்சுமணனும் யாகம் செய்யப்படும் இடத்திற்குச் சென்றார்கள். அது அடர்ந்த ஒரு காட்டிற்குள் இருந்தது. யாகம் செய்யப்படும் ஹோம குண்டத்தின் பக்கம் கருப்பான மரம் ஒன்று இருந்தது. அதன் கீழேதான் இந்திரஜித் யாகத்திற்கான பலிகளைச் செய்திருந்தான். அங்குதான் நின்றுகொண்டு இந்திரஜித்தை எதிர்க்க வேண்டும் என்று இட்சுமணனிடம் விபீஷணன் கூறவே இலட்சுமணனும் தயாராக நின்றான்.

இந்திரஜித் ரதத்தில் அமர்ந்து அட்டகாசமாக அங்கு வந்தான். அப்போது இலட்சுமணன் "அடே இந்திரஜித்தா! நீ எங்கே ஓடிப் போனாய். வா. இங்கு என்னுடன் நேருக்கு நேர் நின்று போர் புரி" என்று சவால் விட்டான். அது கேட்டு இந்திரஜித் இலட்சுமணனை அலட்சியமாகப் பார்த்தான். அப்போது விபீஷணனும் அங்கு இருப்பதைக் கண்டான்.

அவன் விபீஷணனைப் பார்த்து "சிற்றப்பா! நீங்கள் ராட்சஸ குலத்தில் பிறந்தும் ஏன் அவர்களிடம் பற்றுதல் இல்லாமலே இருக்கிறீர்கள்? இது நீங்கள் பிறந்த இடம். என் தந்தை உங்களது அண்ணன். இப்படி இருக்க என்னை ஒழிக்க நீங்கள் எதிரிக்குத் துணை புரியலாமா? நம் குலத் துரோகியாகி நீங்கள் எதிரியின் தாசானுதாசனாக ஆகிவிட்டீர்களா? நம் உறவினர்கள் உங்களை வெறுக்கிறார்கள். உயர் பதவி பெற எதிரியை நாடுவது மகாக் கேவலம் என்று இகழ்கிறார்கள். இப்படி என் யாகத்தைக் குலைத்து நான் வெற்றிபெற முடியாமல் செய்தது எந்த வகையில் நியாயம்?" என்று கேட்டான்.

விபீஷணனும் "இந்திரஜித்தா! என் குணம் உனக்குத் தெரியாதா? நான் அமைதியை நாடுபவன். அநீதியைச் சகிக்காதவன். எனவே நான் என் அண்ணனான இராவணனை எதிர்த்துப் பேசினேன். அறிவுரை கூறினேன். நல்லதை உன் தந்தை கேட்டானா? இல்லை. அதன் பயனாக அவனோடு ராட்சஸர்கள் எல்லோருமே அழியப் போகிறார்கள். நீயும் அழியப் போகிறாய். நீ என்னை எப்படி வேண்டுமானாலும் ஏசு, நான் ஒன்றும் சொல்ல மாட்டேன். இறக்கப் போகும் உன்னைத் திட்டுவதால் என்ன பயன்? மாய சீதையைக் கொன்று நீ ஏமாற்றப் பார்த்தாய். இது எந்த விதத்தில் சரியோ? நீ இலட்சுமண





னுடன் போர் புரிந்து இறப்பது தான் சரி'' என்றான்.

அப்போது இந்திரஜித் லட்சு மணனைப் பார்த்து "இலட்சுமணா! அன்று என் அம்புகளால் நீ அடிபட்டு நினைவு இழந்து விழுந்து கிடந் ததை மறந்து விட்டாயா? அன்று நீ உயிர் தப்பினாய். ஆனால் இன்றோ தப்ப முடியாது. இதை நினைவில் வைத்துக் கொள்'' என்றான் கோபத் தோடு.

இலட்சுமணனோ "அடே இந்திர ஜித்தா! சும்மா வாய் வார்த்தை பேசாதே. போர்க்களத்திலிருந்து திருடன் மாதிரி ஓடிப் போனாய். இதுதானா உன் வீரதீரப் பிர தாபம்! இப்போது காட்டு உன் வீரத்தை'' என்றான். அது கேட்டு இந்திரஜித் இலட்சுமணன் மீது அம்புகளைப் பொழியலானான். அவற்றால் இலட்சுமணன் படுகாய முற்றான். ரத்தம் சொட்டலா யிற்று இதனால் ஆத்திரப்பட்டு இலட்சுமணன் தன் தாக்குதலைத் தீவிரமாக்கினான். இருவரிடையே பலத்த போர் மூண்டது.

சற்று நேரத்திற்குப் பின் இந்திர ஜித் பயப்படுவதை விபீஷணன் கவனித்தான். அதனால் அவன் இலட்சுமணனிடம் "இந்திரஜித் உன் தாக்குதலால் பயந்து விட்டான். அவனைக் கொல்ல இதுவே நல்ல சமயம்'' என்றான். அதனால் உற் சாகம் கொண்டு இலட்சுமணன் கூரிய அம்புகளால் இந்திரஜித் தைக் கடுமையாகத் தாக்கினான். இந்திரஜித் தன் நினைவை இழந்து விழுந்தான்.

சற்று நேரத்திற்குப் பின் தன் நினைவைப் பெற்ற இந்திரஜித் தன் எதிரே நின்று சிரிக்கும் இலட்சு மணனைக் கண்டான். இதனால் அவனுக்கு ஆத்திரம் அதிகரித்தது. அதனால் இலட்சுமணன் மீதும் விபீஷணன் மீதும் அம்புகளைப் பொழியலானான்.

அந்த அம்புகளை எளிதில் இலட்சுமணன் தடுத்து விட்டதால் அவனுக்கு அவற்றால் எவ்வித காயமும் ஏற்படவில்லை. அவன் இந்திரஜித்தை கேலி செய்தவாறே



"இதுதான் நீ அம்பு எய்யும் லட்சணமா?" எனக் கேட்டுத் தன் கூரிய அம்புகளால் அவனைத் தாக்கினான்.

அந்த அம்புகள் இந்திரஜித்தின் கவசத்தைத் துளைத்தன. அதனால் அது துண்டு துண்டாகி அவனது ரதத்தில் விழுந்தது. அவனது உடலில் பல இடங்களில் காயங்கள் ஏற்பட்டன. இதனால் கோபம் கொண்டு இந்திரஜித் இலட்சுமணனின் கவசத்தையும் துளைத்தான். அவர்கள் இருவரும் சலிக்காமல் போர் புரிந்தார்கள். அது வெகு நேரம் வரை நடந்தது. இருவருமே தனக்கே வெற்றி கிடைக்க வேண்டும் என நினைத்துப் போர் புரிந்து கொண்டிருந்ததால் அது மிகவும் தீவிரமாகியது.

அப்படி நடக்கும் போரைக் கண்டு விபீஷணன் வானரர்களுக்கு மேலும் உற்சாகமூட்டி ராட்சஸர்களைத் தாக்கச் செய்ய வேண்டும் என நினைத்தான். எனவே அவன் வானர வீரர்களைப் பார்த்து "வானர வீரர்களே! இராவணன் இந்தப் போரில் வெற்றி பெற இந்திரஜித்தைத் தான் நம்பிக் கொண்டிருக்கிறான். அதனால் இவனை விட்டு வைக்கக் கூடாது. இவனுக்கு உதவும் படையை அழிக்க வேண்டும். இவ்னையும் தாக்க வேண்டும். இவன் இல்லை என்றாகி விட்டால் இராவணனின் பாடு திண்டாட்டம் தான். இவனை நான் கொல்ல முடியாது. ஏனென்றால் இவன் எனக்கு மகன் முறையாகிறான். அதனால் தான் இவனைக் கொல்லாமல் இருக்கிறேன்" என்றான்.

இதைக் கேட்ட வானரர்கள் உற்சாகம் கொண்டார்கள். உறுமிக் கத்திக் குதித்து ராட்சஸப் படையைத் தாக்கலானார்கள். விபீஷணனும் தன் நான்கு அமைச்சர்களோடு சேர்ந்து ராட்சஸப் படையைத் தாக்கலானான்.

இதே சமயம் இலட்சுமணன் இந்திரஜித்தின் தேரோட்டியின் தலையைத் துண்டித்தான். அதனால் இந்திரஜித் தன் தேரைத் தானே ஓட்டிக் கொண்டு போர்புரிய

வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. அப்போதும் அவன் புரிந்த போர் கடுமையாகத்தான் இருந்தது. இலட்சுமணனோ தன் தாக்குதலைத் தளர்த்தி விடவில்லை. மேலும் தீவிரமாக்கினான்.

இந்திரஜித் அதுவரை தன்னை மிஞ்சும் வீரன் யாருமே இல்லை என்று நினைத்துக் கொண்டிருந்தான். இப்போது இலட்சுமணனின் தாக்குதலைக் கண்டதும் அவனது அந்த எண்ணம் மறையலாயிற்று. அவன் சோர்ந்து போனது கண்டு வானரர்கள் உற்சாகம் அடைந்தார்கள்.

பிரமாதி, சரபன், ரபசன், கந்தமாதனன் என்ற நான்கு வானர வீரர்கள் இந்திரஜித்தின் தேரின் நான்கு குதிரைகளைத் தாக்கிக் கொன்றார்கள். இதனால் இந்திரஜித் தன் தேரிலிருந்து கீழே குதித்துப் போர் புரியலானான். அவனைச் சுற்றி ராட்சஸ வீரர்கள் நின்றுகொண்டு அவனுக்குப் பாதுகாப்பை அளித்தார்கள்.

இந்திரஜித் அவர்களிடம் ''நீங்கள் போர் புரிந்து கொண்டிருங்கள். நான் நகருக்குள் போய் வேறு ஒரு தேரில் ஏறி வருகிறேன்'' என்று கூறிப் போர்க்களத்தை விட்டுச் சென்றான்.

இலங்காபுரிக்குச் சென்ற இந்திரஜித் ஒரு நல்ல தேரில் அமர்ந்து போர்க்களத்திற்கு வந்தான். திடீரென்று புதிய ரதத்தில் அமர்ந்து வந்த இந்திரஜித்தைக் கண்டு இலட்சுமணனும் விபீஷணனும் ஆச்சரியப்பட்டார்கள். இந்திரஜித்தோ வானரர்களைக் கடுமையாகத் தாக்கிப் பெரும் சேதத்தை விளைவித்தான்.



அதுகண்டு இலட்சுமணன் அம்பு எய்து அவனது வில்லை முறித்தான். தேரோட்டியைக் கொன்றான். அப்போதும் இந்திரஜித் சளைக்காமல் இலட்சுமணனனோடு விபீஷணனையும் தாக்கி காயப்படுத்தினான். இதனால் விபீஷணன் கோபம் கொண்டு அவனது ரதத்தின் குதிரைகளை அடித்துக் கொன்றான்.

இலட்சுமணனும் இந்திரஜித்தும்

பல சக்தி வாய்ந்த அஸ்திரங்களால் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டனர். முடிவில் இலட்சுமணன் இந்திராஸ்திரத்தைப் பிரயோகித்து இந்திரஜித்தின் தலையை வெட்டி வீழ்த்தினான். அது கண்டு விபீஷணனும் வானரர்களும் வெற்றி முழக்கம் செய்தார்கள். ராட்சஸர்களோ துக்கத்தோடு இலங்கைக்குள் ஓடிப் போயினர்.

இலங்காபுரிக்குள் ஓடிய ராட்சஸ வீரர்கள் இராவணனை அணுகி இலட்சுமணன் விபீஷணனின் உதவியுடன் இந்திரஜித்தைக் கொன்றதைக் கூறினார்கள். அதுகேட்டு இராவணன் மூர்ச்சையுற்று விழுந்தான். சற்று நேரத்திற்குப் பின் அவன் தன் நினைவை பெற்றதும் கோபத்தால் பற்களை நறநற வென்று கடித்து "நான் இப்போதே போய் அந்த சீதையைக் கொன்று விடுகிறேன். அவளால்தான் என் மகன் இறந்தான் சீதை இல்லை என்றாகிவிட்டால் ராமன் ஏன் போர் புரியப் போகிறான்?" என்று உரக்கக் கூவினான்.

அதைக் கேட்டு மண்டோதரியும் அமைச்சர்களும் அப்படிச் செய்ய வேண்டாம் என்றார்கள். மண்டோதரியும் "இப்போதாவது சீதையை ராமரிடம் ஒப்படைத்து விடுங்கள். இதனால் மேலும் உயிர் சேதம் எற்படாமல் தடுக்கலாம்" என்றாள். மந்திரிகளும் "நீங்கள் சீதை மேல் காட்டும் கோபத்தை இராமரிடம் காட்டிப் போர்புரியுங்கள். நீங்கள் கொல்ல வேண்டியது இராமரைத்தான். சீதையை அல்லவே. சீதையைக் கொன்று விட்டால் ராமர் போரை நிறுத்திவிடுவார் என்பது என்ன நிச்சயம்? மேலும் ஆத்திரப்பட்டுத் தாக்குவாரே!" என்றார்கள்.

இராவணனும் அதுகேட்டு சீதையைக் கொல்லும் எண்ணத்தை விட்டுவிட்டு இராமரைக் கொல்ல லங்கா யாகத்தைச் செய்யலானான்.



## செயற்கை மழை

குஜராத் மாநில கச் பகுதியில் சென்ற ஜூலை மாதத்தில் சில முயற்சிகளை மேற்கொண்டு செயற்கை மழை பெய்ய வைத்திருக்கிறார்கள். எரியும் கரி மீது 'சில்வர் அயோடைட்' என்ற ரசாயனப் பொருளைத் தூவி அதிலிருந்து கிளம்பும் ஆவியை மேகங்களைத் தாக்கும்படி செய்து செயற்கை மழையை வரவழைத்திருக்கிறார்கள். இவ்வாறு செய்வதை 'முகில் விதைப்பு' என்கிறார்கள். இதற்கு மேகங்களும் தட்ப வெப்ப நிலைப் பதமும் காற்றில் ஈரப் பதமும் சரியான நிலையில் இருக்க வேண்டும். இந்த முயற்சி 27 இடங்களில் நான்கு நாட்கள் தொடர்ந்து நடைபெற்றன.



## நீச்சலில் சாதனை



பெங்களூரைச் சேர்ந்த ஜானகி என்ற உடல் ஊனமுற்ற வங்கி ஊழியர் பக்கவாதத்தால் தம் கால்களின் செயல்திறனை இழந்தவர். சக்கர வண்டியில் அமர்ந்து செல்பவர். இவர் நீச்சலில் ஆர்வம் காட்டிக் கற்று இங்கிலாந்தையும் பிரான்ஸையும் பிரிக்கும் 'இங்கிலீஷ் சானல்' என்ற குறுகிய கடற்பகுதியில் இங்கிலாந்திலிருந்து 37 கி. மீ. தூரம் நீந்தி பிரான்ஸின் கரையை அடைந்து சாதனை புரிந்துள்ளார். இவர் பெங்களூரிலேயே நீச்சல் கற்க ஆரம்பித்தார். கடல் நீச்சல் கற்க மால்வே கடற்கரைக்குச் சென்றார். அங்கு ஒரு வாரத்தில் அந்நீச்சலைக் கற்று அங்கிருந்து 7 கி. மீ. தூரத்திலுள்ள செயிண்ட் மேரிஸ் தீவிற்கு நீந்திச் சென்றார். மால்வேயில் ஐந்து வாரம் இருந்து மூன்று வாரம் தீவிரமாய்க் கற்று ஜூலை 23ந் தேதி இங்கிலீஷ் சானலை நீந்தி பிரெஞ்சுக் கடற்கரையை அடைந்த இவர் 'இன்று நான் என் கனவை நனவாக்கினேன்' எனக் கூறினார்.

## வளர்ச்சிக்குத் தடை!



கரீம் நகரைச் சேர்ந்த கட்டைய்யா தனது பதினோறாவது வயதில் 4 அடி உயரமே இருந்தார். ஆனால் அதற்குப்பின் கிடுகிடுவென உயர்ந்து வளர்ந்து தன் பதினெட்டாம் வயதில் 7 அடி 4 அங்குலத்திற்குப் போய் விட்டார். இதனால் அவருக்குப் பல பிரச்னைகள் ஏற்பட்டன. அவர் மேலும் உயரமாகி விடுவார் எனக் கண்டு டாக்டர்கள் அவரைப் பரிசோதித்தார்கள். அவ்வாறு அவர் வளர அவரது உடலிலுள்ள ஒரு கட்டியிலிருந்து சுரக்கும் சக்தியால் எனக் கண்டு அறுவை சிகிச்சையால் அவர்கள் அக்கட்டியை அப்புறப்படுத்தி விட்டார்கள். அப்படியும் நம் நாட்டில் மிக உயரமான மனிதர் கட்டையாதான். அந்த அறுவைச் சிகிச்சைக்குப் பின்னரே அவரது வளர்ச்சி தடைப்பட்டு நின்றது!



# மன்னனின் தீர்ப்பு

ஆத்தூரில் ராமு என்றும் சோமு என்றும் இரு நண்பர்கள் இருந்தார்கள். ராமு மிகவும் நல்லவன். பிறருக்கு உதவுபவன். பழிபாவத்திற்கு அஞ்சுபவன். சோமுவோ பொறாமையும் சூதுவாதும் நிறைந்தவன். ராமுவை ஊரார் மதித்து மரியாதை காட்டி வந்தார்கள். இது சோமுவுக்கு எரிச்சலை மூட்டி ராமுவின் மீது பொறாமை கொள்ளச் செய்தது.

சோமு ராமுவை ஏதாவது ஒரு சிக்கலில் மாட்டிவிட்டு வேடிக்கை பார்க்க ஏதாவது சந்தர்ப்பம் கிடைக்காதா என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இப்படி இருக்கையில் ராமுவின் மகளுக்குத் திருமணம் நிச்சயமாகியது. கல்யாணச் செலவுக்குக் கொஞ்சம் பணம் குறையவே ராமு தன் நண்பனான சோமுவிடம் கடன் கேட்டான்.

சோமு எதிர்பார்த்த வாய்ப்பு கிடைத்துவிட்டது. ராமுவை எப்படி ஒரு சிக்கலில் மாட்டி விடலாம் என்று யோசித்தவாறே அவன் "அடாடா! இந்த சமயத்தில் எனக்கும் பணமுடையாக இருக்கிறதே. போன வாரம்தான் என் நான்காவது பெண்ணை அவளது கணவன் வீட்டிற்கு அனுப்பினேன். அப்போது மாப்பிள்ளை கேட்ட பெருந்தொகையைக் கொடுக்க வேண்டியதாயிற்று" என்றான்.

அப்போது ராமு "என்னைப் பற்றித்தான் உனக்கு நன்றாகத் தெரியுமே. என்னால் வேறு யாரிடமும் கடன் கேட்க முடியாது. உன்னை விட்டால் எனக்கு இப்போது உதவ யாருமே இல்லை. இந்த உதவியைச் செய்தால் என் உடம்புத் தோலையே உனக்குச் செருப்பாகத் தைத்துப் போடுகிறேன்.

—பாபநாசம் சாமா—

எப்படியாவது நான் கேட்கும் தொகையைக் கொடு. அசலையும் வட்டியையும் ஆறே மாசத்தில் கொடுத்து விடுகிறேன்'' என்றான்.

சோமுவும் சற்று யோசிப்பது போல நடித்து "ஆகா! என் மாமா போனவாரம் கொடுத்துவிட்டுப் போன பணம் என்னிடம் இன்னமும் இருக்கிறது. அதிலிருந்து நீ கேட்கும் தொகையைக் கடனாகக் கொடுக்கிறேன். அவர் வந்து கேட்டால் எப்படியாவது சமாளிக்கிறேன்'' என்று கூறி ராமு கேட்ட தொகையைக் கொடுத்தான்.



ராமுவும் தன் மகளின் திருமணம் முடிந்து ஆறாவது மாதத்தில் தான் சோமுவிடம் கடன் வாங்கிய தொகையை வட்டியுடன் திருப்பிக் கொடுத்தான். அப்போது சோமு "அசலும் வட்டியும் திருப்பிக் கொடுத்து விட்டாய். ஆனால் நீ சொன்னபடி உன் உடம்புத் தோலைக் கொண்டு செருப்பு தைத்துக் கொடுக்கவில்லையே'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட ராமு திடுக்கிட்டு "என்ன சோமு! விளையாடுகிறாயா? எல்லோரும் வழக்கமாகச் சொல்வது போலத்தான் நான் அன்று சொன்னேன். அது ஒரு பேச்சுக்காகத் தானே ஒழிய உண்மையிலே அப்படிச் செய்வேன் என்பதற்காக அல்ல. உனக்கு மிகவும் நன்றி செலுத்தக் கடமைபட்டவன் என்பதே அதன் பொருள்'' என்றான்.

சோமுவோ "அதெல்லாம் இல்லை. நான் உனக்குக் கடன் கொடுத்தபோது நீ சொன்னபடி நடந்தே தீர வேண்டும். நீ அப்படிச் செருப்புத் தைத்துக் கொடுப்பதாக அப்போது சொல்லிவிட்டு இப்போது முடியாது என்றால் என்ன அர்த்தம்?'' என்று கேட்டான்.

இருவரிடையே வாய்ப்பேச்சு முற்றவே பலர் அங்கு கூடி விட்டார்கள். விஷயம் என்ன என்பதைத் தெரிந்து கொண்டு அவர்கள் சோமுவுக்கு நல்லவிதமாகச் சொல்லிப் பார்த்தார்கள். சோமுவோ "அதெல்லாம் இல்லை. ராமு தான் சொன்னபடி தன் உடம்புத்தோலைக்

கொண்டு செருப்பு தைத்து எனக்குக் கொடுக்கத்தான் வேண்டும்'' என்று பிடிவாதம் பிடித்தான்.

விஷயம் பஞ்சாயத்துத் தலைவர் வரை போயிற்று. அந்தத் தலைவர் சோமுவிடம் கடன் வாங்கி விட்டுத் திருப்பிக் கொடுக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார். எனவே சோமுவைத் திருப்திப் படுத்த அவனுக்குச் சாதகமாகத் தீர்ப்பை அளித்தார். அப்போது ராமு "நான் இந்த விஷயத்தை இந்நாட்டு மன்னனிடம் கூறி நியாயம் கேட்கிறேன்" எனக் கூறித் தலைநகருக்குப் போய் மன்னனிடம் முறையிட்டான்.

மன்னனும் சோமுவை வரவழைத்து விசாரித்துவிட்டு "சரி. இதற்கான தீர்ப்பை ஒரு வாரம் கழித்து அளிக்கிறேன்" எனக்கூறி ராமுவையும் சோமுவையும் அனுப்பி விட்டான்.

இதற்கு இரண்டு நாட்களுக்குப் பின் சோமு ஏதோ ஒரு வேலையாகத் தன் ஊரிலிருந்து தலைநகருக்குப் புறப்பட்டான். வழியில் ஒரு காட்டை அவன் கடக்க வேண்டி வந்தது. அவன் அந்தக் காட்டு வழியே சென்றபோது சில திருடர்கள் அவனைத் தாக்கினார்கள். அப்போது அங்கு குதிரைமீது ஏறி வந்த மன்னன் அவர்களைப் பார்த்தான்.

அப்போது சோமு "அரசே! என்னை காப்பாற்றுங்கள். நான் உங்களுக்கு ஏழு பிறவிகள் எடுத்து



நாயாய் உழைப்பேன்'' என்று கதறினான். மன்னனும் திருடர்களைத் தாக்கி விரட்டினான். திருடர்கள் பயந்து ஓடிவிட்டார்கள். சோமு மன்னனின் கால்களில் விழுந்து வணங்கித் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டான்.

ஏழாவது நாளன்று ராமுவும் சோமுவும் மன்னனின் தீர்ப்பைப் பெற தர்பாருக்குச் சென்றார்கள். அப்போது மன்னன் "சோமு சொல்வது சரியே. எதைச் சொன்னாலும் அதன்படி நடந்தே தீர வேண்டும். எனவே ராமு தான் கூறியபடி சோமுவுக்குச் செருப்பு தைத்துக் கொடுக்கத்தான் வேண்டும்'' என்று தீர்ப்புக் கூறினான். அது கேட்டு ராமுவும் தர்பாரில் இருந்தவர்களும் திகைத்துப் போனார்கள்.

அப்போது மன்னன் "சோமு! ராமு தான் சொன்னபடி நடக்கத்தான் போகிறான். நீ என்ன செய்யப் போகிறாய்? எனக்குக் கொடுத்த வாக்கின்படி நடக்கத்தானே போகிறாய்?'' என்று கேட்டான். சோமுவும் "தங்களுக்குக் கொடுத்த வாக்கா! என்ன என்று எனக்கு விளங்கவில்லையே'' என்றான்.

மன்னனும் "அன்று திருடர்களிடமிருந்து நான் உன்னைக் காப்பாற்றிய போது நீ என்ன சொன்னாய்? ஏழு பிறவிகள் எடுத்து நான் செய்த உதவிக்கு நன்றிக் கடன் செலுத்துவதாகக் கூறினாயே. அதற்குள் மறந்து விட்டாயா?'' என்று கேட்டான்.

சோமுவும் "மறக்கவில்லை



அரசே! எனது நன்றியைச் செலுத்த எல்லோரும் வழக்கமாகக் கூறவதைத் தான் நான் கூறினேன். அது ஒரு பேச்சுக்குத்தானே'' என்றான்.

மன்னனும் "அது ஒரு பேச்சுக்கா? இல்லை இல்லை. ஒருவன் எதை யாவது சொன்னால் அதன்படி நடந்தேயாக வேண்டும் என்று நீ ராமுவை வற்புறுத்தி இங்கு இழுத்து வந்து தீர்ப்புப் பெறவில்லையா? அதுபோல நீயும் எனக்குக் கொடுத்த வாக்கின்படி நடந்தே தீர வேண்டும். நீ ராமுவின் தோலை உரித்துச் செருப்புகளைத் தைத்துக்கொண்ட மறுவினாடியே ஏழு பிறவிகளை என் முன்எடுத்து என் நன்றிக் கடனைத் தீர்க்க வேண்டும். நீதி எல்லோருக்கும் ஒன்றுபோலத்தான். உனக்கு ஒரு தீர்ப்பு, ராமுவுக்கு ஒரு தீர்ப்பு என்று கிடையாது'' என்றான். அது கேட்டுத் தர்பாரில் இருந்தவர்கள் மகிழ்ச்சியுடன் கை தட்டி ஆஹா என்று கூவினார் கள்.

சோமு தலைகுனிந்து நின்றான். மன்னன் சரியான பாடம் தனக் குப் புகட்டவே அவ்வாறு கூறினான் என்பதை சோமு உணர்ந்தான். உடனே அவன் மன்னனின் கால் களில் விழுந்து "அரசே! இனி ஒருப்போதும் இந்த மாதிரித் தப்பு செய்ய மாட்டேன். இதுவே நான் முதல் தடவையாகச் செய்த தப்பு. என்னை மன்னித்து விடுங்கள்'' என்று வேண்டினான்.

மன்னனும் "சரி. நான் உன்னை மன்னிக்கிறேன். நீ ராமுவிடம் அவனுக்கு இழைத்த அநீதிக்காக மன்னிப்பு கேள்'' என்றான். சோமு ராமுவின் கைகளைப் பற்றிக் கொண்டு தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். ராமுவும் சோமுவை மன்னித்தான். இருவரும் மன்னனை வணங்கி விடை பெற்றுக்கொண்டு சென்றார்கள். அன்று முதல் சோமு ராமுவின் மீது பொறாமை கொள்ளா மல் உண்மையான நண்பனாகவே இருந்து வரலானான்.



# நல்ல பசுதான்!

ஒரு ஜமீன்தாரருக்குக் கறவை மாடுகள் என்றால் மிகவும் பிடிக்கும். நல்ல கறவை மாடாக இருந்தால் விலைக்கு வாங்கி விடுவார். ஒரு முறை மாட்டுச் சந்தைக்குப் போனபோது ஒரு குடியானவனிடம் ஒரு நல்ல கறவை மாடும், கன்றும் இருப்பதைப் பார்த்தார்.

அவர் அக்குடியானவனிடம் "என்ன பசுவை விற்கிறாயா?" என்று கேட்டார். அவனும் "அதற்காகத்தானே சந்தைக்கு ஓட்டி வந்திருக்கிறேன்" என்றான். "பசு நல்லதுதானா?" என்று அவர் கேட்கவே அவனும் "என் பசுவை நான் நல்லது என்று சொல்லாமல் வேறு எப்படிச் சொல்ல முடியும்?" என்றான். "இது முட்டாதே?" என்று அவர் கேட்க அவனும் "இதைச் சீண்டினால் முட்டத்தான் செய்யும். மனிதன் கோபம் கொண்டால் கருவுகிறான். பசு கோபம் கொண்டால் முட்டத்தானே முட்டும்" என்றான்.

ஜமீன்தாரரும் "எல்லாம் சரி. தினமும் இது எவ்வளவு பால் கொடுக்கும்?" என்று கேட்டார். குடியானவனும் "அது இவ்வளவுதான் என்று ஒரு அளவைக் கூற முடியாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். என் பசு தன் பாலை எல்லாம் அப்படியே கொடுத்து விடும். மிச்சம் வைத்துக் கொள்ளாது" என்றான்.

அந்த பதிலால் ஜமீன்தாரரும் திருப்தி அடைந்து குடியானவன் கூறிய விலைக்கு மேல் பத்து ரூபாய் அதிகமாகவே கொடுத்து அந்தப் பசுவை வாங்கிக் கொண்டார்.






# நேர்மைக்குப் பரிசு

ஈரான் நாட்டில் ஒரு கிராமத்தில் இப்ரஹீம் என்றும் இஸ்மாயில் என்றும் இரு நண்பர்கள் இருந் தார்கள். இப்ரஹீம் நேர்மையான வன். பழிபாவத்திற்கு அஞ்சு பவன். இஸ்மாயிலோ தன்னலம் மிக்கவன். பிறரைப் பற்றிக் கவலைப்படாதவன். எவ்வழியி லாவது பணம் சம்பாதிக்க வேண் டும் என நினைப்பவன். இந்த இருவரும் காட்டிற்குப் போய் விறகு வெட்டி அதை விற்றுப் பிழைப்பவர்கள்.

ஒருநாள் இந்த இரு விறகு வெட்டிகளும் காட்டில் விறகு வெட்டிக் கொண்டிருந்தார்கள். அப்போது இஸ்மாயில் இப்ரஹீ மைப் பார்த்து "இப்போது நமக்கு இந்தக் காட்டில் ஒரு புதையல் கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்" என்றான். இப்ரஹீம் "அப்படிக் கிடைத்தாலும் அது நம் முடையது என்றாகி விடுமா? அது இந்த நாட்டின் சொத்து. எனவே அதை அந்நாட்டை ஆளும் பாதுஷா விடம் கொடுத்துவிடத்தான் வேண் டும்" என்றான்.

இஸ்மாயிலோ "நான் இப்படிப் பட்ட முட்டாள்தனத்தை செய்ய மாட்டேன். எனக்கு வேண்டியது பணம். உன் நேர்மை அல்ல" என்று கூறினான்.

இதற்கு மறுநாள் இருவரும் காட்டில் விறகு வெட்டிக் கொண்டி ருந்த போது இப்ரஹீம் ஒரு பெரிய மரக்கட்டையைப் பிளந்து கொண்டிருந்தான். அப்போது அதிலிருந்து ஒரு தங்கப் பாத்திர மும், நிறையத் தங்க நாணயங் களும் அவனுக்குக் கிடைத்தன. அவற்றைக் கண்டு அவன் ஆச் சரியப்பட்டான்.

—ஈரான் நாட்டுப் பழங்கதை—



அவன் உடனே இஸ்மாயிலைக் கூப்பிட்டு "எனக்கு நிறையத் தங்க நாணயங்கள் கிடைத்திருக்கின்றன" என்றான். எனவே இஸ்மாயிலும் "அவற்றை என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டான். இப்ரஹீமோ "அப்படியே எடுத்துப் போய் பாதுஷாவிடம் கொடுத்து விடுவேன்" என்றான்.

இஸ்மாயிலோ "இதனால் உனக்கு என்ன லாபம்? அவர் பரிசாக எதுவும் கொடுக்காவிட்டால் என்ன ஆவது? உனக்கு நஷ்டம் தானே. நானாக இருந்தால் அதை எனக்கே வைத்துக் கொண்டு விடுவேன்" என்றான். இப்ரஹீமோ "அது முறையல்ல" என்று கூறினான்.

மறுநாள் இப்ரஹீம் தனக்குக் கிடைத்த தங்கப் பாத்திரத்தையும் பொற்காசுகளையும் பாதுஷாவிடம் கொண்டு போய்க் கொடுத்தான். பாதுஷாவும் அவனது நேர்மையைப் பாராட்டி அவற்றை வாங்கிக் கொண்டு தம் கஜானாவிலிருந்து ஆயிரம் பொற்காசுகளைக் வரவழைத்து இப்ரஹீமிற்குக் கொடுக்க அவன் அதை வாங்கிக் கொண்டு பாதுஷாவிற்கு நன்றி செலுத்தி விட்டுச் சென்றான். அந்தப் பணத்தைக் கொண்டு அவன் வியாபாரத்தை ஆரம்பித்தான்.

இதற்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு போலித் தங்க நாணயங்களை அசல் தங்க நாணயங்கள் எனக் கூறி இஸ்மாயில் கொடுத்ததற்காக அவன் கைது செய்யப்பட்டான் என்ற செய்தி இப்ரஹீமிற்குக் கிடைத்தது. இப்ரஹீம் தலைநகருக்கு விரைந்து சென்று பாதுஷாவைக் கண்டு இஸ்மாயில் தன் நண்பன் என்றும் தான் அவனுக்கு ஜாமீன் கொடுப்பதாயும் அவனை விடுவிக்க வேண்டும் என்றும் வேண்டினான்.

அது கேட்டு பாதுஷா "இவனுக்கு நீ ஜாமீன் கொடுப்பதாகச் சொல்கிறாயே இவனை எப்படி நம்பலாம்?" என்று கேட்டார். இப்ரஹீம் அப்போது "எப்படியானாலும் இவன் என் நண்பன்

தானே. என்னை ஏமாற்றமாட்டான். அதனால்தான் நான் இந்தப் பொறுப்பை ஏற்கிறேன்'' என்றான்.

அப்போது பாதுஷா தன் தர்பாரில் உள்ளவர்களிடம் "உங்களுக்கு ஒரு அதிசய சம்பவம் பற்றிக் கூறுகிறேன். ஒரு காட்டில் இரு விறகு வெட்டிகள் பேசிக் கொண்டிருந்ததை - அங்கு வேட்டைக்காகப் போன நான் தற்செயலாகக் கேட்டேன். ஒருவன் தான் நேர்மையைக் கடைப்பிடித்து நடப்பதாகக் கூறினான். மற்றவனோ அது பற்றித் தனக்கு கவலை இல்லை என்றான். இருவரையும் பரீட்சிக்க நான் தங்க முலாம் பூசிய நாணயங்களைக் காட்டில் இரு இடங்களில் மறைத்து வைத்தேன். அவை அவர்களுக்குக் கிடைத்தன. ஒருவன் நேர்மையுடன் அவற்றைக் கொண்டு வந்து கொடுத்தான். மற்றவன் அவற்றைத் தானே வைத்துக் கொண்டு விட்டான். நேர்மையுடன் கொடுத்தவன் தான் இந்த இப்ரஹீம். மற்றவன் சிறைப்பட்டுள்ள இஸ்மாயில்'' என்றார்.

அதைக் கேட்டு தர்பாரில் இருந்தவர்கள் இப்ரஹீமின் நேர்மையைப் பாராட்டினார்கள். இஸ்மாயிலை இகழ்ந்தார்கள். இஸ்மாயில் தன் செய்கைக்காக வெட்கித் தலை குனிந்து நின்றான்.

அப்போது இப்ரஹீம் பாதுஷாவிடம் "ஐயா! பார்த்தீர்களா! என் நண்பன் தன் செய்கைக்காக உண்மையிலேயே வருத்தப்படுகிறான். அவனை மன்னித்து விடுதலை செய்ய வேண்டுகிறேன் இனி ஒரு போதும் தவறு செய்ய மாட்டான்'' என்று வேண்டினான்.

பாதுஷா இப்ரஹீமின் வேண்டுகோளை ஏற்று இஸ்மாயிலை விடுதலை செய்தார். இஸ்மாயிலும் திருந்தி இப்ரஹீமின் வியாபாரத்தில் கூட்டாளியாகி நேர்மையுடன் நடந்து வரலானான்.



# இயற்கை விநோதங்கள்:



## குரங்குகளின் உடல் தூய்மை!

மனிதர்களைப் போலவே குரங்குகளும் தம் உடல்களைச் சொரிந்து கொள்வதைக் காண்கிறோம். குரங்கு தன் உடலை சுத்தமாக வைத்துக் கொள்கிறது. ஒரு குரங்கு மற்ற குரங்கின் உடலை இலைகளால் சுத்தம் செய்கிறது. சில சமயங்களில் சிறு குச்சியால் பற்களின் மத்தியிலுள்ள அழுக்கையும் அது போக்கி விடுகிறது.



## குறி தவறாத மீன்கள்

ஆர்சர் எனப்படும் மீன்கள் 20 செ. மீ. நீளமானது. வெண்மையான இவற்றின் உடலில் கருப்புநிற வரிக்கோடுகள் இருக்கும். இவை தம் உணவை வேட்டையாடும் முறை விசித்திரமானது. பெரிய கண்களைக் கொண்ட இவை நீரின் மேல் மட்டத்திற்கு வந்து அதற்கு மேல் தொங்கும் இலை நுனிகளைப் பற்றி அங்குள்ள கிருமிகளை நனைத்து நீரில் விழச் செய்து அவற்றை உட்கொள்கின்றன. நீரில் விழும் புழு பூச்சிகள் தப்பி விடாமலும் இவை பார்த்துக் கொள்கின்றன.

## தும்பிகளின் துணிச்சல்

லார்வா நிலையிலுள்ள தும்பிகளை 'நீர்க்கன்னி' (நைம்ப்) என்கிறார்கள். இவை மிகுந்த பசியுடன் நீரில் வாழும் சிறிய மீன்களையும், புழு பூச்சிகளையும், நத்தைகளையும், தவளை குஞ்சுகளையும் பிடித்து தின்கின்றன. எதுவும் கிடைக்காவிட்டால் தம்முடன் இருக்கும் லார்வாக்களையே பிடித்துத் தின்கின்றன. இப்படியே இருந்து நீரில் வளர்ந்து தும்பி உருவம் பெற்ற பின் வெளியே வருகின்றன. தம்மேல் தோலை உரித்துக் கொண்டு அழகிய இறக்கைகளுடன் வெளி உலகில் வந்த இவை புழு பூச்சிகளை வேட்டையாடுகின்றன.



# Don't you owe the












## ...little one a cuddles?












# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்**


M. Natarajan


M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ நவம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **இன்று நடத்திடுவான் தம்பியை வழிகாட்டி**

இரண்டாவது போட்டோ: **நாளை நிறுத்திடுவான் உலகைச் சீர்தூக்கி**

பரிசு பெற்றவர்: **பி. ராஜ்பாபு, நடுவூர், வ. ஆ. மாவட்டம்**



Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

